உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௧௮.] சித்தார்த்தி௵ தைமீ [பகுதி ௩.
Vol. XVIII. January—February 1919-20. No. 3.

## உவமைப்போலி.

உவமைப்போலியாவது உவமையிலக்கணம் பொருந்தாததாயிருந்தும் உவமைபோலத் தோன்றுவது. போலி-போன்றிருப்பது. இதனை வடநூலார் திருட்டாந்தாபாசம் என்பர். ஆபாசம்-போலி. இந்த உவமைப்போலி பதினெட்டு என்று சிவஞான சித்தியாரிலே அருணந்தி சிவாசாரியர் கூறினர். "விளங்குவமைப்போலி யீரொன்பான்காணும்" (சித்தி) இந்நூலுரைகாரர்களாகிய மறைஞானதேசிகரும், சிவாக்கிரயோகிகளும், சிவஞானயோகிகளும் இப்பதினெட்டினையும் விவரித்துக்கூறினர். இவருள்ளே சிவஞானயோகிகள் வடமொழியிற் கூறிய பெயர்க்காரணங்களை நோக்கி அவற்றிற்கு இசையுமாறு தமிழிற் பெயர்த்து விளக்கினர். உதாரணம் காட்டிற்றிலர். மற்றை இருவரும் வடமொழியிற் கூறியவாறே பெயர்களைக்கூறி வடசொற்கலப்போடும் விவரணங்கூறினர். விவரணங்களிலே முரணும் இருக்கின்றது. அறிதலும் அரிதாயிருக்கின்றது. மறைஞானதேசிகர் கூறியவைகளுள்ளே சிலவற்றை ஒருவர் விளக்கிச் சிலவற்றை வாளாவிட்டனர். அவைகளை இங்கே எழுதுவாம்.

பதினெண்வகை.

௧. சாத்தியவிகலம் ௪. ஆசிரயஹீனம்
௨. சாதனவிகலம் ௫. அவ்வியாத்தியபிதானம்
௩. உபயவிகலம் ௬. விபரீதவியாத்தியபிதானம்

எ. சாதனவியாவிருத்தம் கஉ. சந்திக்தசாத்தியம்
அ. சாத்தியாவியாவிருத்தம் கச. சந்திக்தசாதனம்
கூ. உபயவியாவிருத்தம் கரு. சந்திக்தவுபயம்
க0. ஆசிரயவிகீநம். கசு. சந்திக்தவாசிரயம்
கக. வியாவிருத்தியபிதானம் கள. சந்திக்தசாத்தியவியாவிருத்தம்
கஉ. விபரீதவியாத்தியபிதானம் கஅ. சந்திக்தசாதனவியாவிருத்தம்

க. சாத்தியவிகலமாவது சாத்தியமானது தன்னியல்பில் இல்லாத உவமை. இதனைச் சிவஞானயோகிகள் சாத்தியமுடைத்தாகாதது என்பர். சாத்தியம்-துணிபொருள். விகலம்-தன்னியல்பிலே இல்லாதது, குறைவு. உ-ம். மனம் அநித்தியம்; உருவமுடைமையால், பரமாணுவைப்போல என்பதாம். இங்கே பரமாணு என்பது உவமை. இவ்வுவமையிலே அநித்தியம் என்னும் சாத்தியத்தன்மை இல்லை. பரமாணுவை நித்தியம் என்பர்.

உ. சாதனவிகலமாவது சாதனமானது தன்னியல்பிலே இல்லாத உவமை. இதனைச் சிவஞானயோகிகள் ஏதுவுடைத்தாகாதது என்பர். சாதனம்-ஏது. உ-ம். மனம் அநித்தியம்; உருவமுடைமையால், கன்மம்போல என்பதாம். இங்கே கன்மம் என்னும் உவமையிலே உருவமுடைமை என்னும் சாதனம் இல்லை. கன்மம் உருவப்பொருளன்று.

௩. உபயவிகலமாவது சாத்தியம் சாதனம்என்னும் இரண்டும் இல்லாத உவமை. இதனைச் சிவஞானயோகிகள் இரண்டுமுடைத்தாகாதது என்பர். உ-ம். மனம் அநித்தியம்; உருவமுடைமையால், ஆகாயம்போல என்பதாம். இங்கே ஆகாயம் என்னும் உவமையிலே அநித்தியத்தன்மை என்னும் சாத்தியமும், உருவமுடைமை என்னும் சாதனமுமாகிய இரண்டுமின்மை அறிக. ஆகாயம் நித்தியம்.

ச. ஆசிரயகீனமாவது தனக்குச் சார்பில்லாத உவமை. இதனைச் சிவஞானயோகிகள் சொரூபமில்லது என்பர். உ-ம். மனம் அநித்தியம்; உருவமுடைமையால், ஆகாயப்பூப்போல என்பதாம். இங்கே ஆகாயப்பூ என்னும் உவமையிலே பூவுக்கு ஆகாயம் சார்பிடமாகாமை அறிக. ஆசிரயம்-சார்பு. கீனம்-இன்மை.

ரு. அவ்வியாத்தியபிதானம்

சு. விபரீதவியாத்தியபிதானம்

எ. சாதனாவியாவிருத்தம்

அ. சாத்தியாவியாவிருத்தம்

கூ. உபயவியாவிருத்தம்

க0. ஆசிரயவிஹீனம்

கக. வியாவிருத்தியபிதானம்

கஉ. விபரீதவியாத்தியபிதானம்

கங. சந்தித்தசாத்தியமாவது ஐயப்பட்ட சாத்தியமுடைய உவமை. இதனைச் சிவஞானயோகிகள் சாத்திய முடைமை நிச்சயிக்கப்படாதது என்பர். சந்தித்தம்-ஐயப்பட்டது. உ-ம். இவன் அரசனாய் வருவான்: சோழராசன் மரபினனாதலின்; அரசியல் பெறற்குரிய அரசகுமரன்போல என்பதாம். இங்கே அரசியல் பெறற்குரிய அரசகுமாரன் என்னும் உவமையிலே அரசனாய் வருவான் என்ற சாத்தியம் நிச்சயிக்கப்படாமையால் ஐயப்பட்டதாதல் அறிக.

கச. சந்தித்தசாதனமாவது ஐயப்பட்ட சாதனமுடையை உவமை. இதனைச் சிவஞானமுனிவர் ஏதுவுடைமை நிச்சயிக்கப்படாதது என்பர். உ-ம். இவன் முற்றறிவில்லாதவன்; விருப்பு வெறுப்புக்களோடு கூடினவனாதலின், தெருவிற்செல்லும் புருடன்போல என்பதாம். இங்கே தெருவிற்செல்லும் புருடன் என்னும் உவமையிலே விருப்பு வெறுப்புக்களோடு கூடியிருக்கையாகிய சாதனம் நிச்சயிக்கப்படாமையால் ஐயப்பட்டதாதல் அறிக.

கரு. சந்தித்தோபயமாவது ஐயப்பட்ட சாத்தியசாதனங்களையுடைய உவமை. இதனைச் சிவஞானயோகிகள் இரண்டுமுடைமை நிச்சயிக்கப்படாதது என்பர். உபயம்-இரண்டு. உ-ம். இவன் சுவர்க்கமடைவான். பூர்வபுண்ணியமுடையவனாகையால்; தேவதத்தன்போல. இங்கே தேவதத்தன் என்னும் உவமையிலே சுவர்க்கமடைதலாகிய சாத்தியமும், பூர்வபுண்ணியமுடைமையாகிய சாதனமுமாகிய இரண்டும் நிச்சயிக்கப்படாமையால் ஐயப்பட்டனவாதல் அறிக.

கசு. சந்தித்தவாசிரயம்.

கஎ. சந்தித்தசாத்தியாவியாவிருத்தம்.

கஅ. சந்தித்தசாதனாவியாவிருத்தம்.

இப்பெயர்கள் அச்சுப்பிரதியின்படி எழுதப்பட்டனவாதலிற் பிழைப்படலும் கூடும். பொருள் விளங்கி எழுதப்பட்டனவாயிற் பிழைப்படமாட்டா. ஆதலாற் பெயர்களிலும் உரைகளிலுந் தோன்றும் பிழைகளைத் திருத்தியும், பெயர்களளவிலே விடப்பட்டவைகளை உரைகாட்டி விளக்கியும் இந்தச் செந்தமிழிலே அறிஞர் யாராவது எழுதுவாராக. அது படிப்பவர்களுக்கு நன்கு பயன்படும்.

வடமொழி தென்மொழிகளிலே இவ்வுவமைப் போலிகளைக் கூறும் முதனூல்களையும், மற்றைத் தர்க்கநூல்களையும், சிவஞானசித்தியாருரைகளையுங் கற்றுணர்ந்தோர்க்கு விளக்குதலும் திருத்துதலும் இலகுவாகும்.

இங்ஙனம்

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

௨

# பக்கப்போலி.

---

பக்கப்போலியாவது பக்கவிலக்கணத்திற் குறைவுடையதாயிருந்தும் ஒருபுடையொத்துப் பக்கம்போலத் தோன்றுவது. பக்கப்போலி நான்கு என்று அருணந்தி சிவாசாரியர் கூறுவர். "கண்டு பக்கப்போலி நான்கு" (சித்தியார்) இதனை வகுத்துரைத் தற்கண் உரைகாரர் மாறுபடுகின்றனர். மறைஞானதேசிகர் க. பட்சாபாசம், உ. அநுமானுபாசம், ௩. பிரதிஞ்ஞாபாசம், ௪. வசனுபாசம் எனக் கூறிப் பின் க. அப்பிரசித்தவிசேடணம், உ. அப்பிரசித்தவிசேடியம், ௩. அப்பிரசித்தோபயம், ௪. அப்பிரசித்தாசம்பந்தம் எனக் கூறுவாருமுளர் என்றார். சிவாக்கிரயோகிகள் க. ஓரிடத்திற் பக்கமில்லாமை, உ. ஓரிடத்திற் பக்கத்தன்மையில்லாமை, ௩. ஓரிடத்திற் பக்கம் பக்கத்தன்மை இரண்டுமில்லாமை, ௪. ஓரிடத்திரண்டுமிருந்தும் வியாத்தியில்லாமை எனக்கூறி வடமொழிவாக்கியமுங் காட்டினர்.

சிவஞானயோகிகள் க. துணியும்பொருட் கிடனாகாதது, உ. துணியும்பொருட்கொருமருங் கிடனாகாதது, ௩. துணிந்தபொருட் கிடனாவது, ௪. துணிந்தபொருட்கொருமருங் கிடனாவது என்றார். நிரம்பவழகியதேசிகர் க. பிரத்தியக்ஷாபாசம், உ. அநுமானாபாசம், ௩. ஸ்வநுமானாபாசம், ௪. வசனாபாசம் என்றார். பாண்டிப்பெருமாள் அப்பிரசித்தவிசேடணம் முதலிய நான்கையுங்கூறிப் பின்னும் ஐந்து காட்டி ஒன்பதும் பக்கப்போலி என்றார். ஐந்துமாவன, க. பிரத்தியக்க விருத்தம், உ. அநுமானவிருத்தம், ௩. சுவசனவிருத்தம், ௪. உலக விருத்தம், ௫. ஆகமவிருத்தம் என்பன. இந்த ஒன்பதும் அநுமான விளக்கத்திலே செந்தமிழ்ப் பத்திராதிபர் ஸ்ரீமான் திரு. நாராயணையங்காரவர்களாலே இனிது விளக்கப்பட்டிருக்கின்றது.

இங்கே கூறப்பட்டவைகளுள்ளே "ஈண்டு பக்கப்போலி நான்கு" எனக்கூறப்பட்டவை இவை என்பதும், அவற்றின் விளக்கம் இது என்பதும், முதனூல் இது என்பதும், சிவஞானயோகிகள் கூற்றுகளுக்கு வடமொழிப்பெயர்களும் உதாரணங்களும் இவை என்பதும், திருத்தங்கள் இவை என்பதும், சமாதானம் இது என்பதும் அறிதல்வேண்டும். அறிஞர் இச்செந்தமிழில் எழுதக்கடவர்.

இங்ஙனம்
அ. குமாரசுவாமிப் பிள்ளை.

---

## "தொல்காப்பியமும் பிற்காலத்தாரும்."

செந்தமிழ் ௧௮-ந் தொகுதி ௮௦-ம் பக்கத்தொடர்ச்சி.

86. "இ ஈ எ ஏ ஐயென விசைக்கு
மப்பா லைந்து மவற்றோ ரன்ன
அவைதா, மண்பன் முதனா விளிம்புற லுடைய."

இ ஈ எ ஏ ஐ என்று கூறப்படும் அக்கூற்று ஐந்தும் அகர ஆகாரங்களைப்போலவே அங்காந்து கூறும் முயற்சியாற் பிறக்கும். அவைதாம் அங்ஙனம் பிறக்குமாயினும் மேல்வாய்ப்பல் இடையில் அடிநாவினது ஓரம் உறுதலையும் உடையன என்க. இவற்றாலும் வளியின் செயலாலே உறுப்புக்கள் ஏற்றபடியாமெனக் கண்டுகொள்க.

அன்னத்தை நண்ணிய பல்லை அன்பல் என்றார் "அன்னம் நண்ணிய பல்முதல்" என்றதாலும் அறிந்துகொள்க. மேல்வாய்ப்பல் கீழ்வாய்ப்பல் என்னும் வழக்கும் இதனை வலியுறுத்தும். இதனை அறியாத உரைகாரரெல்லாம் அதனை வினைத்தொகை எனவும், நாவினிம் பரல் அணுகப்படும் பல் எனவும் மயங்கி உரைத்தார். அன்னார் கூற்றிற்கு இணங்க அலைது மேல்வாய்ப்பல்லை மாத்திரம் அணுகியும் கீழ்வாய்ப்பல்லை அணுகாதும் இருப்பினன்றே அவர் உரை பொருந்தும் என்க.

இச்சூத்திரப்பொருளை நன்னூலார் "இ ஈ எ ஏ ஐ அங் காப்போ டண்பன் முதனா விளிம்புற வருமே." எனச் சூத்திரித்தது பொருந்தாது. என்னை? "அ ஆ அங்காப்புடைய" என்றவர் அங்காப்புடைமையோடு விளிம்புறலுடைய எனப்பொருந்தாமையின் என்பது.

87. "உ ஊ ஒ ஓ ஔ வென விசைக்கு
மப்பா லைந்து மிதழ்குவித் தியலும்."

உ ஊ ஒ ஓ ஔ என்று கூறப்படும் அக்கூற்று ஐந்தும் இதழ்குவிந்து நடக்கும் என்க.

இவற்றை விளக்கும்போது "இதழ்குவிவே" என நன்னூலார் கூறினார். அவ்வாறு குவிதலான் மாத்திரம் அவை பிறவா எனமறுக்க.

88. "தத்தந் திரிபே சிறிய வென்ப."

முன்னர் முப்பகுதிப்பட உயிர் எழுத்துக்களைப் பிறப்பு முதலியவற்றால் ஒக்கும் என்றாலும் தம்முடைய தம்முடைய வேறுபாடுகள் சிறியவாக உடைய என்க.

இச்சூத்திரத்திற்கு உயிர்க்கும் மெய்க்கும் புறனடையாதப் பொருள் பண்ணி யுரைகாரரெல்லாம் மயங்கினர். அது கருத்தாயின் "அவ்வா றெழுத்து மூவகைப் பிறப்பின" என்பது போன்றவை மிகையாம் என மறுக்க.

மேலும் அவ்வாறுவதை ஆண்டாண்டு விளக்கிக் காட்டுதும். இவ்வுரைகாரர் கூற்றை நம்பிய நன்னூலார் "எடுத்தல்-படுத்தல்" என்னும் பொதுப்புறனடையால் இவற்றை அமையவைத்ததூஉம் பொருந்தாது. என்னை? "தத்தந்திரிபே," என்றதனால் பன்னிரண்டுயிர்களும்

தங்கள் தங்கள் திரிபிற் சிறிய வேறு பாடுடைய எனவும், "அவ்வாறெழுத்தும்" என்றதனாலும் "மெல்லெழுத்தாறும்" என்றதனாலும் தங்கள் முதலியன வளிசெல் நிலை வேற்றுமையின்றி முயற்சிவேற்றுமை இல எனவும் கூறியதனாலும், ஏனையவற்றைத் தனித்தனி விளக்குவதனாலும் பெறும் உண்மையைப்போலன்றி, கஙக்கள் முதலியன முயற்சி வேற்றுமை உடைய எனப் பொருள்படுவதனாலும் கஙவும் சஞவும் எனக் கொடுத்தவிட்மைகளால் அடையும் பயன் ஒன்றுமின்றிப்போதலினாலும் அன்றியும் ஒவ்வொன்றிற்காம் பிறப்புறுப்புக்களின் வேற்றுமையை அவர் சூத்திரத்தாலே பெறப்படாமையாலும் பிறவாற்றாலும் என்பது.

89. "ககார ஙகார முதனா வண்ணம்."

ககாரஙகாரங்கள் முதல் நாவானது முதல் அண்ணத்தை உற்றப்பிறக்கும் என்க.

90. "சகார ஞகார மிடைநா வண்ணம்."

சகார ஞகாரங்கள் இடைநாவானது இடை அண்ணத்தை உறப்பிறக்கும் என்க,

91. "டகார ணகார நுனிநா வண்ணம்."

டகாரணகாரங்கள் நுனிநாவானது நுனி அண்ணத்தை உறப்பிறக்கும் என்க.

இம்மூன்றனையும் ஒரு சூத்திரமாக்கி ஓசைமுதலிய நயங்களை நன்னூலார் பாழ்படுத்தினமையை உரைத்தறிக.

92. "அவ்வா றெழுத்து மூவகைப் பிறப்பின."

அக்கூறப்பட்ட ஆறெழுத்துக்களும் மூவகையாகிய பிறப்பினை உடைய என்க.

உரையாசிரியரை உள்ளிட்டார் அனைவரும் அவ்வாறெழுத்துக்களும் தம்முள் வேற்றுமை உடைய எனவே கூறினர். அவர் கூற்றுப் பொருந்தாது. என்னை? அவ்வாறு வேற்றுமையுடையனவாயின் மூவகைப் பிறப்பின என விதந்து கூறுவதாற்போந்த பயன் இன்மையான் என்பது. இதனை முன்னர் விளக்கிக் காட்டினும்.

93. "அண்ண நண்ணிய பன்முதன் மருங்கி—னாநுனி பரந்து
மெய்யுற வொற்றத்—தாமினிது பிறக்குந் தகார நகாரம்"

அண்ணத்தைச் சேர்ந்த பல்லினது அடியாகிய இடத்திலே நாவினது நுனி விரைந்து தன்வடிவு உறும்படி ஒற்றத் தகர நகரம் என்றவை தாம் இனிதாகப் பிறக்கும் என்க.

இதனாலும் அவை இரண்டற்கும் வளிசெல் நிலை வேற்றுமை யன்றி ஏனைய வின்மையறிக.

நா நுனி பரந்து மெய்யுறச் செவ்வன் ஒற்றாவிடின் அவை பிறவாமை உரைத்தறிக.

அவ்வாறு ஒற்றின் அவைதாம் இனிதாகப் பிறக்கும் என்க. இதனை அறியாத நன்னூலார் "அண்பல்லடிநா முடியுறத்தந வரும்." என்று சூத்திரித்தார். ஆசிரியர் கூறியபடி பரந்து ஒற்றாது இவர்கூற்றை நிறைவேற்றினால் பிறப்பன தகரநகரங்கள் அன்மை எனவுணர்க.

94. "அணரி நுனிநா வண்ண மொற்ற
றஃகான னஃகா னாயிரண்டும் பிறக்கும்".

ஊர்ந்துகொண்டு நாவினது நுனி அண்ணத்தை ஒற்ற றகர னகரங்கள் என்னும் அவ்விரண்டும் பிறக்கும் என்க. அணரிவினையெச்சம்; "ஆயிர வணர்தலை" என்த்தொகையாகி வருதலையும் "அணர்ந்த பாம்பினொடும் பனிழ்காந்தள்" என எச்சமாய் வருதலையும் கண்டுகொள்க.

அணரி நுனிநா எனக்கூறியது அணரிக்கொண்டே நா நுனி செல்ல வேண்டியது எனவும், இதனை நா நுனி அணரி எனப்பின்னர் மாற்றியது நா நுனி சென்று அணரிவருடவேண்டியது எனவும் வேற்றுமை காட்டவேண்டி என்க.

ஒற்றல் என்பது நீண்டித்தன்னிலையில் வருதலைக்குறிக்கும். உறுதல் என்பது ஆண்டுப் பொருந்தியுறுதலைக்குறிக்கும். வருடல் என்பது பொருந்தி ஊசலாடல்போல மெல்லிதாக விடாது வருதலைக் குறிக்கும்.

இவற்றை ஒற்றிக்கொடு தடவிக்கொடு என்றுரைக்கும் வழக்கும் வலியுறுத்தும்.

உரையாசிரியரை உள்ளிட்டாரனைவரும் இவற்றை ஒருபொருட் சொற்களாகப் பொருளுரைத்தமையைப் பின்பற்றி முறைபிறழ நன்னூலார் சூத்திரித்துத் தவறுபட்டனர்.

95. "நுனிநா வணரி யண்ணம் வருட
ரகார ழகார மாயிரண்டும் பிறக்கும்."

நாவினது நுனியானது அணரி அண்ணத்தைத் வருடவும் (அணராது) வருடவும் ரகார ழகாரம் ஆகிய அவ்விரண்டும் பிறக்கும் என்க.

அவ்வளவு வேற்றுமை இல்லாமை கருதி உம்மை கொடாது கூறி உய்த்துணர வைத்தார். நன்னூலார் இதனை "அண்ண நுனிநா வருட ரழவரும்." எனக்குறுக்கித் தவறுபட்டனர்.

96. நாவிளிம்பு வீங்கி யண்பல் முதலுற
வாவயி னண்ண மொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

நாவினது விளிம்பு அண்பல்லின் அடியிலே உருசிறக்க ஆவயின் அவ் வண்ணத்தை ஒற்றவும் வருடவும் லகர ளகரம் ஆகிய அவ்விரண்டு எழுத்துக்களும் பிறக்கும் என்க.

ஒரு தன்மையாய் அவைகட்குப் பிறப்புளவாயின் ஒற்றி வருட எனவே சூத்திரிப்பார் ஆதலின் அவைகளை முறைப்படி ஏற்பக்கொள்க. "அண்பலு முதலு மண்ணமுமுறையி—னாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்—லகார ளகார மிரண்டும் பிறக்கும்." என நன்னூலார் யாத்த சூத்திரத்தில் "முறையின்" என ஒரு சொல் உணர்த்தினமை யால் எமது உரையே அவர்க்கும் கருத்தாயது காண்க. அதனையும் அந்நூலுரைகாரர் மறைத்தமை அவரது அறியாமையை விளக்கும்.

97. "இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்."

இதழ்கள் தம்மில் இயைந்த பின்னரே பகர மகரங்கள் பிறக்கும் என்க.

இதனாலும் வன்மை மென்மையின் ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறிக.

இதழ் இயைந்து என்பதுவே சாலுதல் அறியாத நன்னூலார் "மீகீழிதழுறப் பிறக்கும்" என இடர்ப்பட்டுச் சூத்திரித்தார். அவர்

அச்சூத்திரம் மீஇதழ் கீழ்இதழை உற எனப்பொருள்படுதலையும் "கீழ் மேலிதழுற்று" எனக் கூறவேண்டியதையும் இவ்வாறு பலபடி கூறுவது பலவாறூஉக் குழூஉக் களுக்குக் காரணமாவதையும் பிறவற்றையும் உணராராயினர் என்க. இதழ் இயைந்ததும் அவற்றை வளி பிளந்து செல்லுங்கால் அவை பிறப்பதனால் இதழியைந்தென்றார்.

98. "பல்லிதழியைய வகாரம் பிறக்கும்."

மேற்பல்லும் கீழிதழும் கூட வகரமானது பிறக்கும் என்க.

வளிவருகாலை அவ்வாறியைதலின் "இயைய" என்றார். மேற்பல்லும் கீழிதழும் பொருந்துவந்த இயல்பாதலின் அதனை விளக்க வேண்டாமையை அறியாத நன்னூலார் "மேற்பல்லிதழுற" என்றார்.

இதனுக்கு மாறாகக் கீழ்ப்பல்லை மேலிதழ் உறினும் அது பிறப்பதையும் அறிந்தன்றே ஆசிரியர் "பல்லிதழியைய" எனச்சூத்திரிப்பாராயினர்.

இவ்வாறே பகரமகரங்களையும் ஏற்றபெற்றியுற உரைத்துணர்க.

99. "அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்."

உயிர் எழுத்துக்கள் பிறப்பதற்காக அண்ணத்தைச் சேர்ந்த மிடற்று எழுவளியின்து ஓசையானது அம்மிடற்றின் கண்ணுற்று அடைவதனாலே யகரவொற்றுப் பிறக்கும் என்க.

ஏனை மெய்யெழுத்துக்கள் அண்ணத்தை உறுதல் போலாது அண்ணஞ் சேர்ந்த இசை மிடற்றுக்கண் உறுதலே இதனோடு அவற்றின் வேற்றுமை என்பார் "அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை-கண்ணுற்றடைய" என்றார். இதனை அறியாத உரைகாரர் எல்லாம் அண்ணம் கண்ணுற்றடைய எனவே பொருளுரைத்துத் தவறுபட்டனர். நன்னூலாரோ "அடிநா வடியண முறயத் தோன்றும்" என்றார். இவ்வாறு உரைத்தது பொருந்தாதென்று இலக்கண விளக்க நூலுடையார் மறுத்துக் கூறியதை ஆண்டு உணர்ந்துகொள்க.

100. "மெல்லெழுத் தாறும் பிறப்பி னாக்கஞ்
சொல்லிய பள்ளி நிலையின வாயினு
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்."

மெல்லெழுத்துக்கள் ஆறும் தம்பிறப்பினது ஆக்கம் சொல்லிய இடத்தே நிலைபெற்றனவாயினும் ஓசை கூறுங்கால் (மிடற்றுவழியாகச்செல்லும் ஏனைய போலாது) மூக்கின் வழியாக வளிசெல்லுதலினாலே பிறக்கும் ஓசையினால் அவை யாப்புறத் தோன்றும் என்க.

இதற்கு விசேடவுரை வகுத்தார் எல்லாம் "யாப்புற" என்றதினால் இடையினத்திற்கு மிடற்றுவளியும் வல்லினத்திற்குத் தலைவளியும் கொள்க எனவும், நன்னூலார் வன்மை உரம் பெறும் எனவும் தமக்கு அறிந்தவாறு கூறியவெல்லாம் தவறுதலை முன்னர் விளக்கியவற்றைக் கொண்டு ஆராய்ந்து உணர்க.

101. "சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த வேனை மூன்றுந்
தத்தஞ் சார்பிற் பிறப்பொடு சிவணி
யொத்த காட்சியிற் றம்மியல் பியலும்."

சிலஎழுத்துக்களைச் சார்ந்து தோன்றின் அல்லது தமக்கெனத்தோன்றுதற்கு ஓர் இயல்பு இலவென்று (அம்முப்பதெழுத்துக்களோடு சேரவைக்காது) ஏனையவாக வெளிப்படுத்தப்பட்ட அம்மூன்று எழுத்துக்களுக்கு உளவாம் பிறப்பினைக் கூறுங்கால் தத்தமக்கு உரிய சார்பாகிய மெய்களது சிறப்புப் பிறப்பிடத்தே பிறத்தலோடு பொருந்தி நடக்கும் என்க.

இவற்றை அறியாத உரைகாரர் எல்லாம் காட்சி என்பதற்கு நெஞ்செனப் பொருள்கொண்டு உரைகூறி மேற்கோளுங் காட்டாராய் ஆய்தம் நெஞ்சுவளியாலே பிறக்கும் என்றார். அவ்வாறாயின் ஆசிரியர் அதனைத் தனித்துச் சூத்திரித்தாயினும் அவ்வாறு பொருள்பட இதன் கண்ணினைத்தாயினும் இருப்பர். அவ்வாறு இல்லாமையே அவர் கூற்றறைத்தவறென்னும்.

உண்மையைக் கூறாது வேறுமும கூறவே விழையும் நன்னூலாரும் "ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி" என்றார். அது பொருந்தாது. என்னை ? ஆய்தத்தை உரைக்குமிடத்துக் ககரமுதலிய மெய்போன்ற முயற்சி உடையதன்றி அகர ஆகாரம் போன்ற அங்காப்பு இன்மையாலும் அங்காவாமல் ஓர் எழுத்தும் பிறவாமையாலும் அங்காப்

புடைய எனச்சிலவற்றை விதந்து கூறியது வாயை மூடாது உரைக்க வேண்டும் என்பதன்றிப் பிறவற்றை உணர்த்தாமையாலும் பிறவாற்றாலும் என்பது.

102. "எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளபிற் கோட லந்தணர் மறைத்தே."

103. "அஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கு
மெய்தெரி வளியிசை யளவுநுவன் றிசினே."

இச்சூத்திரங்கட்கு உரையாசிரியர் வகுத்தருளிய உரையே மெய்யுரை என்க.

நன்னூலார் ஐகார ஒகாரக் குறுக்கங்களையும் மகரக் குறுக்கத்தினையும் சார்பின்பாற்படுத்தியதும் குற்றம், என்னை? குற்றியலிகரமும், குற்றியலுகரமும் மெய்போல உயிரேற இடங்கொடுத்தும், உயிர் போல மெய்யின்மேல் ஏறியும் உயிர்வரின் தன்மேல் ஏறவிடாது உடம்படுமெய் கொடுத்தேற்றியும் தன்னை எழுத்திடை யறிவிக்காது மொழியிடை அறிவித்தும் ஏற்ற பெற்றியாகிப் பலவகைப்பட்டிருத்தலின் தனி எழுத்தெனப்பட்டமை போலாது தத்தம் இயல்புத்தன்மையே யாண்டும் பெற்று நடத்தலின் என்பது. இன்னும் ஆசிரியர் குற்றியலுகரக் குறுக்க முதலியனவற்றை வேறெழுத்தாகக் கொள்ளாமையே அவர் கொள்கை குற்றமாதற்குச் சான்றாம் என்க.

இனிப் "புள்ளிவிட்டவ்வொடு" என்ற சூத்திரத்தைப் பற்பல வாய்ந்து முன்னர் விளக்கினும் எனினும் புதியனவாகவும் சிற்சில பெற்றேமாதலின் அவற்றையும் ஈண்டு விளக்குதல் முறைமை என்க.

இச்சூத்திரம் முன்னுருபுள்ளிவிட்டு அவ்வொடு ஆகியும் என்று அவ்வயப்படின் வந்தவுரு என்று கூறவேண்டியதில்லை எனப்பட்டு இதற்குக் காட்டிய குற்றங்கள் நிலைபெறுவேவெனின்? அற்றன்று, என்னை மெய்புள்ளிவிடுதல் அகாவுயிர் ஏறியதற்கன்றிச் சாரியை முதலியன வரும்வழியும் உண்டாதலானும், அகரமேறிய வழியே புள்ளிவிடுமெனின் ஏனையுயிரேறியவிடத்துப் புள்ளிவிடாது பிறிதிரிபே வரப்பெறும்

என்பது போதாலானும், ஆசிரியரும் இக்குறைபெறாது நிற்றற்கே ஆண்டு "உருவுருவாகி" என்ற போத்தந்ததை நோக்க "ஏனையுயிரோ டவ்வுருவுதிரிந்தும்" என்று ஆண்டமைதலே சிறப்பாதலானும் பிற வாற்றானும் என்பது.

[மெய்ம்மயக்கவாராய்ச்சி.]

ஆசிரியர் "அம்மூவாறும்" என்ற சூத்திரமுறைகொண்டு இருவகை மெய்ம்மயக்கங்களையும் வலிமெலியிடையென்னும் வரிசைப்படுத்திக் கூறுவான்வேண்டி முதற்கண் வேற்றுநிலை மெய்ம்மயக்கங் கூறுவாராயினர்.

வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திற்கு வல்லினத்துள் கசதபக்கள் உரியனவாகா ஆதலின் அவற்றை விலக்கி டறக்களைமட்டும் விளக்குவான் எடுத்துக்கொண்டார்.

இனி டறக்களோடு கசபக்கள் மயங்கும். லளக்களோடும் அவை மயங்குவனவாதலின் லளக்களையும் டறக்களோடிணைத்து "டறலள * * * துரிய" எனச் சூத்திரித்தார்.

இனி லளக்களோடு கசபக்களன்றி யவக்களும் மயங்குவன ஆதலின், "அவற்றுள், லளஃகான் * * * * தோன்றும்" எனச் சூத்திரித்தார்.

[இனித் தத்தம் இனங்களோடு மயங்கு மெல்லினங்கள் தத்தமினங்களோடன்றிப் பிறவோடு மயங்கு மயக்கம் கூறுங்கால் ஆண்டாண்டினமென்று தழுவிப்போகாது ஈண்டு வேறுசூத்திரஞ் செய்தது மிகையாமெனின் ஆகாது என்னை? இங்ஙனம் கூறுங்கால் ஙஞணநமக்களைக் கூறுமிடத்து ஙகரத்திற்கும், இனத்தோடன்றிப் பிறவோடு வேற்றுநிலை மெய்ம்மயக்கத்தின் மயங்காத ஙகரத்திற்கும் தனிச்சூத்திரஞ் செய்யும்படி வருதலின் என்க.]

அதன்பின்னர் ஙகாம் ககரத்தோடன்றி வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திற் குரியதாகாதாகலின் அதனையகற்றி ஏனைய ஞணநமன என்பவைகளுள் ணனக்களோடு மிகுதியான எழுத்துக்கள் மயங்குதலானும் இடையெழுத்துள் ஒன்றாய வகரம் ஞநமக்களோடு சேர்த்துக் கூறுதற்

கேற்றமையானும் ணனக்களை முன்னெடுத்து "அவற்றுள் ணனஃ கான் * * * ழூரிய" எனச் சூத்திரித்தார்.

அதன்பின்னர் ஞமக்களைக் கூறுவாராயினர். ஞமக்களோடு யகரம் மயங்கும். வகரத்தோடு அது மயங்குமாதலின் வகரத்தை யும் ஞமக்களோடு கூட்டி "ஞமவ * * * * றன்றே" எனச் சூத் திரித்தார்.

இனி மகரத்தோடு பகரயகரங்களன்றி வகரமும் மயங்குமாதலின் "மஃகான் * * * தோன்றும்" எனச் சூத்திரித்தார்.

அதன்பின்னர் இடையினத்துள் யரழக்களை கூறவேண்டுவன ஆதலின் "யரழ * * * * தோன்றும்" எனச் சூத்திரித்தார்.

[இனி நன்னூலார் "யரழ முன்னர்மொழி முதன்மெய்வரும்" என்றாங்கு ஆசிரியர் கூறாதது மிகைபடக் கூறலோவெனின்? அற் றன்று, என்னை? ஙகரம் மொழிக்குமுதலாதல் அவர்க்குடம்பாடன் மையின் என்பது.]

முதலாகெழுத்தெனப் பொதுப்படக் கூறினும் மெய்ந்நிலை மயக்க மாதலின் மெய்யெழுத்துக்களில் முதலாவன என்பது தானே பெறப் படும்.

அதன்பின்னர் உடனிலைமெய்ம்மயக்கம் கூறவேண்டுதலின் 'மெய்ந் நிலை * * * * கடையே' எனச் சூத்திரித்தார்.

இதனுள் ரழக்களை அடைக்காமையானும் வேற்றுநிலை மெய்ம் மயக்கத்துள் அமைத்தமையானும் அவை தம்மொடு பிறவே மயங்கு வன என்பதூஉம் வேற்றுநிலை மயக்கத்துட் கூறப்படாதனவாம் கசதக் கள் ஈண்டுக் கூறப்பட்டிருத்தலின் அவை தம்மொடு தாமே மயங்குவன என்பதூஉம் இவ்விருபான் மயக்கத்துள்ளும் வந்த டறஙஞணநமனய லவள என்பன தம்மொடு தாமும் தம்மொடு பிறவும் மயங்குவன என் பதூஉம் உய்த்துணர வைத்தமையறிக. இவ்வாறுகோத்தவரிசை கற்போரினிதுணர்ந்து பயன்பெறுதற்குக் கருவியாமென்க.

டறலள முன்னர்க் கசபவு மவற்றுள்
ளமுன் யவ்வும் மெரிமுன் னினமு
மவற்றுள் ணனமுன் கசஞப மயவவும்

ஞகமவ முன்னர் யவ்வும் மம்முன்
வவ்வும் யரழமுன் ஙவ்வொடு மொழிமுதன்
மெய்யும் மயங்கு மென்மனார் புலவர்.

இச்சூத்திரம் ஆசிரியர் கூறிய வேற்றுநிலை மெய்ம்மயக்கச் சூத்திரங்களை எல்லாம் உள்ளடக்கிச் செல்வதோடு "ஞகமுன் றம்மினம்" "ணனமுன்னினம்" என்ற நன்னூற் சூத்திரங்களுட் டம்மினம் என்றமைக்கியையுங் குற்றங்களில்லாமலும் முன்னர்க் கூறப்பட்ட அவ்வரிசை முறையில் ஒருசிறிதும் மாறுபடாமலும் செல்கின்றது. நன்னூலும் ஓசையில்லாமை, மனதிற்படிந்து பயனளிக்கும் ஆற்றலில்லாமை, தெளிவில்லாமை விளக்குந் தன்மையில்லாமை, படிப்போர்க் கின்னா பயத்தன் முதலாய பற்பல குற்றங்களுக் கிடமாகிப் பயனிலதாமென்க.

இவ்வேற்றுநிலை மெய்ம்மயக்கச் சூத்திரத்தை நன்னூலார் கூறியிருப்பரேல் அதனுக்கியைந்த குற்றங்களை மறுத்தற்குப் பலருந் தலைப்பட்டுழல்வர்.

நன்னூலார் நுணுக்கம் இல்லாது வேற்றுநிலை மெய்ம்மயக்கங்களை நெடுங்கணக்கு வரிசைபற்றிக் கூறினமை படிப்பார்க்கின்னா பயக்குமென் றறிக.

இன்னும் அவர் "ஞணநமன * * * * நிலையே" என்ற சூத்திரத்துட் கூறிய மயக்கங்களை "ஞகமுன் றம்மினம்" "ணனமுன் னினம்" என்றவற்றானும் பிறவற்றானும் கூறினமையினன்றே "டம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே" எனச் சூத்திரிக்க நேர்ந்தது. டகரத்திற்குப் பின்னர் ஞகாரநகாரங்களின் முன்வந்து மயங்குவனவற்றைக் கூறுவது முறையாயிருக்கவும் "வம்முன் யவ்வே" எனத் தனித்துக் கூறும்படியு நேர்ந்தது. இனி ஓரெழுத்தின்முன் ஓரெழுத்து வந்து மயங்குவதைக் கூறினரெனிற் பொருந்தாது, என்னை? ஈரெழுத்து முதலாயினவற்றின்முன் ஈரெழுத்து முதலாயினவந்து மயங்குவனவற்றையும் வரிசையுறக் கூறாமையின் என்பது.

இன்னும் அவர் முதனிலை கடைநிலைகளோடு மெய்ம்மயக்கத்தைச் சேர்த்தமையுங் குற்றம். முதனிலை கடைநிலைகள் ஒருமொழிக்கண் அமைவன. மெய்ந்நிலை மயக்கமோவெனின் ஒருமொழிக்கண்ணும் நிலைமொழியோடு வருமொழிவந்து புணருமிடைக் கண்ணும் அமைவதாதலின்.

இன்னும் அவர் கூறிய மெய்ம்மயக்கங்களாய "ஙம்முன் * * * யவ்வே" என்றற் றொடக்கத்துச் சூத்திரங்களாலேயே தம்மொடு தாமும், தம்மொடு பிறவும், ஆகவந்து மயங்குவன இவ்விவை என்பது பெறப்பட்டிருக்கவும் "டீறதபவொழித்த வீரேழுங்கூட்ட மெய்ம்மயக் குடனில ரழவொழித்தீ ரெட்டாகும்" என்றமையும் பிறவும் குற்றம்.

"தம்பெயர் * * * மெனப" என்ற சூத்திரத்துள் முதலும் என்றதனானே இறுதியும் அடங்குமாதலின் மிகைபடக் கூறுராயினர் என அந்நூலுரைகாரர் புனைந்துரைத்ததூஉம் பொருந்தாது, என்னை? முதலு மயக்கமும் இம்முறை மாறியும் இயலுமெனின் கடையும் மாறுது இயலும் எனப்பொருள் கோடலு முறையாதலின் என்பது.

(தொடரும்)

இங்ஙனம்
K. S. நவநீதகிருஷ்ண பாரதி,
தலைமைத் தமிழ்ப்பண்டிதன்,
ஸ்ரீராமநாத வித்யாலயம், சுன்னுகம், யாழ்ப்பாணம்.

---

## வீணுரை மறுப்பு.

---

செந்தமிழில் ஒருவர் நன்னூல் என்று பொதுமொழியிட்டு அந்நூலைப் புகழுமுகத்தில் "தொல்காப்பியமும் பிற்காலத்தாரும்" என்ற எமது விஷயத்தை அவமே குறைகூறினர். அவர் எம் கருத்தையும் இலக்கண முடிபையும் விஷயநிலைமையையும் தமது நிலைமையையும் நோக்காதும், விஷயத்துட் செல்லாமல் வீணாரவாரம் புரிந்தும், சில சான்றோர் கொள்கைகளைத் தமக்கேற்றவாறே மாற்றி அவற்றையெல்லாம் தாமே கூறியதாக வெறும் புரட்டுச்செய்தும், அப்பிரசித்தமானவற்றை விரித்து விளக்கவேண்டுழியும் விளக்காதும், பிரசித்தமானவற்றை விரித்து விளக்க வேண்டா விடத்தும் வீணே விளக்கியும், யாம் எமது மேற்கோளைச் சொல்லிமுடிக்குமுன் இடையே முறையின்றி வந்து வீண்குறை கூறியும், ஒருவர் மற்றொருவரை இகழ்ந்தனவற்றையும் புகழ்ந்தனவற்றையும் முறையே எடுத்துக்காட்டி அவற்றுள் வலிமையுற்றனவற்றைப் பற்பல விதத்தானே உண்மை புலப்பட விரித்துக்

கூறித் தம்மத நாட்டிப் பிறர்மதம் வீட்டி முறைசெய்யாது இலக்கணக் கொத்து நூலாரும் சிவஞானசுவாமிகளும் நன்னூலாரைப் புகழ்ந்த வர் என வாளா கூறியும், இவ்விக் காரணங்களாலே தொல்காப்பியர் கருத்து இவ்விவையாகும், இவ்விக்காரணங்களாலே நன்னூலார் கருத்து இவ்விவையாகும் எனஅது பொதுவாகத் "தொல்காப்பியர்க் கும் நன்னூலார்க்கும் அது கருத்தன்மையின்" என்றும் சென்றும், எமதுரையை நன்குபயிலாது பொருந்தாதனவற்றை ஏற்றித் தம் மனம்போனவாறு குற்றமேற்றியும், தமதுப்பற்ற சிறுவிஷயம் இரண் டொருநாளில் இரண்டொரு பக்கத்தில் இயற்றப்பட்டு அடங்குவ தறியாது ஓராண்டாகி எட்டுப்பக்கங்கள் பரக்கும் வீணாரவார கோஷத் திற்கும் நல்லவர்மேற் செய்யுந் துவேஷத்திற்கும் தம்மையே விசேஷித் தற்கும் தமக்கமைந்த போலிவேஷத்திற்கும் பாத்திரமாகி நின்றதன்றி எமது விஷயத்தைக் கண்டிக்கு மாற்றலில்லாமையால் அவலித்துக் கவலைப்பட்டுக் கையாறெய்தியழுந்தியும், செனறனரேயன்றி வேறொன் றுஞ் செய்தாரில்லை. என்றாலும் அன்னாரை யிடித்துக்கூறி நல்வழிப் படுத்துவது முறையாதலிற் சிலவற்றை விளக்குதல் எமக்கு நேர்ந்தது.

எமது வாக்கியங்கள் பிழையுடையன எனத்தாபிக்கும் அந் நுண்ணறிவாளர், "தமிழ்ப்பதங்களைப் பகுத்துணர்ந்து கொள்ளுமாறும் வடமொழிப்பதங்கள் தென்மொழிக்கண் வந்து வழங்குமாற்றை இனி துணர்ந்துகொள்ளுமாறும் தென்மொழி இலக்கண நூலுணர்ச்சியோடு தமது வடமொழிஇலக்கண நூலுணர்ச்சியுங்கொண்டு பவணந்தியார் பதவியற்கண் அமைத்த புதுவிதிகளும் நன்னூல் வாய்ந்தது" என்றனர். முன்னரே நன்னூல் பவணந்தியாராற் செய்யப்பட்டது என்றதை மறந்து இதனுள் "பவணந்தியார் பதவியற்கண் அமைத்த புதுவிதி களும்" என்றதும் குற்றம். புது விதிகளைப் பவணந்தியார், பதவியற் கண் அமைத்தாரென்றால் எவ்வெவர் புதுவிதிகளை எவ்வெவ்வியல் களில் அமைத்தார்? பவணந்தியார் புதுவிதிகளைப் பிறவியல்களில் அமைக்கவில்லையா? பதவியற்கண் அமைந்தன வெல்லாம் புதுவிதியன றிப் பிற இல்லையா? பதவியற்கண் அமைந்த விதிகள் வேறிடத்தும் வருகின்றனவே? அவரும் இந்நனூலைச்சொல்லிட புதுவிதி களை யாத்தனரா? இனி அவர் "தமது வடமொழிஇலக்கண நூலு ணர்ச்சி" என்றார். வடமொழிஇலக்கண நூலுணர்ச்சி தமது ஆகும்

பொழுது தென்மொழி இலக்கண நூலுணர்ச்சி பிறருடையதா? இன்னோரன்ன குற்றங்கள் தமது விஷயத்தில் மலிந்திருக்கும் அதனையே குற்றமற்றதாகக் கருதும் இயல்பினர்க்கு எமது விஷயம் குற்றமாதல் பொருந்த முடைத்து. இன்னும் அவர் 'இத்துணை பெருமை வாய்ந்ததாகிய இந்நன்னூலின் சிறப்பு நோக்கியே இலக்கணக்கொத்து நூலாரும் "முன்னோரொழியப் பின்னோர் பலரினுள் நன்னூலாருக் கெந்நூலாரும் இணையோவென்னும் துணிவே மன்னுக" எனப் பவணந்தியாரைப் புகழும் வாயிலாற் புகழ்ந்தனர்" என்றார். இலக்கணக்கொத்து நூலார் "நன்னூலாருக்கு" என்றது முதலில் நன்னூலையும் அதன் முகத்தாலே பின்னர் அந்நன்னூலுடையாரையும் குறிக்கும் ஆதலின் அவர், நன்னூலைப்புகழும் வாயிலாற் பவணந்தியாரை இலக்கணக்கொத்து நூலார் புகழ்ந்தனர் என்று கூறுதலும் குற்றம். இன்னும் இலக்கணக்கொத்து நூலார் பற்பலரையும் தமக்குவேண்டியவிடத்துப் புகழ்ந்தும் வேண்டாவிடத்து வீணே இகழ்ந்தும் செல்வாராதலின் அவர் கூற்றை இன்னோரன்ன இடங்களிற் பிரபல ஆதாரமாக்கொள்வதூஉம் பொருந்தாது.

இவ்வாறு பொருந்தாதனவற்றைப் பொருந்துவனவாகக் கருதி வெளிப்படுத்து மப்பெரியோர்க் கெமது விஷயத்திற் குற்றங் காணுதலியல்பென்க. "பாரதியார் அவர்களோ தாமெழுதிய விஷயத்தைப் பிழையற எழுதவும் ஆற்றலில்லாதவர்களாய் இருக்கின்றார்கள்" என எம்மை இழித்துக் கூறுமுகத்தாலே தம்மை உயர்த்திக் கூறும் உலகமெனக் கருதி எம்மைப் பற்பல இகழ்ந்த அப்பெரியார் "இலங்கமே பல்கலைக் குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான்" என நன்னூல் விருத்தியுரைகாரரும் புகழ்ந்தனர்" என்றனர். இதனுள் "இலங்கமே" என்றது தனக்கு அணித்தாக நின்ற இத்துணை பெருமைவாய்ந்த இதனை" என்ற மூற்றுக்கொடர்மொழியையே சுட்டும். சுட்டவே இவ்விருத்தியுரைகாரரும் பவணந்தியாரைப் புகழும் வாயிலாற் புகழ்ந்தனர் என்பது போகாது. உண்மையாகவே அப்பவணந்தியாரைப் புகழும் வாயிலாற் நன்னூலை அவ்விருத்தியுரைகாரரும் புகழ்ந்தார் என்பது பெறப்பட்டாலும் இலக்கணக்கொத்து நூலார் நன்னூலைப் புகழும் வாயிலாற் பவணந்தியாரைப் புகழ்ந்தது போகாது. அவ்விருத்தியுரைகாரர் பவணந்தியாரைப் புகழும் வாயிலால் நன்னூலைப் புகழ்ந்தார் ஆதலின் "இலங்கமே" எனச்சுட்டியதூஉங் குற்றம். இனி

உரைகாரருக்கு நூலாசிரியர்மேலும் அவர் நூலின் மேலும் மதிப்பும் விருப்பும் இருத்தல் பற்றியன்றே அவர் நூலுக்குரைவகுப்பர். அவர் மேலும் அவர் நூலின்மேலும் மதிப்பும் விருப்பும் இல்லாது உரை வகுப்பாரும் உளரோ? இவற்றை எல்லாம் நோக்காது "விருத்தியுரைகாரரும் புகழ்ந்தார்" என்றதூஉம் பொருந்தாது. "இன்னமே" என்று சுட்டிய அரிய இலக்கண ஆராய்ச்சி உடையாரே பல விஷயங்கள் எழுதி வெளிப்படுத்தத் துணிந்தார் ஆதலின் "பாரதியாரவர்கள் இனி அடங்குவாராக" என ஆணை கூறுவதும் அவர்க்கியல்பாயிற்றென்க.

இனி நன்னூலை மறுப்பதற்குக் கங்கணங் கட்டிக்கொண்ட பெரியாராகிய இலக்கணவிளக்க நூலாரும் தமது காலத்தில் யாவராலும் நன்னூல் பயிலப்பட்டு வந்தமையால் அதன் சூத்திரங்களையே முரண்பாடமைந்தவிடங்களின் மாற்றியும் அறவே முரண்பட்ட சூத்திரங்களை அகற்றிப் பிறவாறமைத்தும் தமது நூலை யாத்தனர் என்பது அந்நூல் முகவுரையாலும் பிறவாற்றானும் அறியக்கிடப்பதை நோக்காது "இலக்கணவிளக்க நூலாரும் இதனையே அங்கீகரித்து இதன்கணுள்ள சூத்திரங்களையே தந்நூலினும் பெரும்பாலும் பொருத்தியாத்தனர்" என்றதுங் குற்றம். இனி அவர் "புள்ளிவிட்டவ்வொடு" என்ற சூத்திரத்திற்கும் பிறவற்றிற்கும் காட்டிய விசேடவுரைகளும் மேற்கோள்களும் இலக்கண விளக்கமுடையார் உதவிபெற்று மாற்றி ஏற்றபெற்றியாகக் கொண்டனர் ஆதலின் தாம் நன்னூலைச் சிறப்பித்தற்குக் கருவியாக அமைந்த அவ்விலக்கண விளக்கமுடையார்க்கும் தமக்கு நன்னூலார் கூற்றுக்கள் அங்கீகாரமாதலை ஏற்றினர்போலும். இவ்வாற்றானே அவர் நல்லாரைத் தீயாரெனவும் திருவுடையாரைத் தரித்திரரெனவும், கற்றாரைக் கல்லார் எனவும் பலபடி புனைந்து கூறுவர் என்பது வெளிப்படை.

இன்னும் அவர் "தொல்காப்பியப் பாயிர விருத்தி முதலியவற்றிலே சிவஞான சுவாமிகளும் இதன் சிறப்பைப் பலவிடங்களிற் புகழ்ந்தனர்" என்றார். சுவாமிகள் இலக்கண விளக்கத்தைக் கண்டிக்கு முகத்தானே இதனைக் கண்டித்தமையு நோக்கிலர். நன்னூலைக் கண்டித்துத் தொல்காப்பியத்தை ஆதரித்த அந்நூல் செல்லும் இடங்களையும் அத்தொல்காப்பியத்தையும் கண்டித்தமையு நோக்கிலர். இன்

னும் இலக்கண விளக்கமுடையார்மேற் சாதித்த பகை காரணத்தானே அந்நூலாரால் மெய்ம்மை கருதி ஆதரிக்கப்பட்டாரைக் கண்டித்தும் குற்றங்கருதி மறுக்கப்பட்டாரை அவமே ஆதரித்தும் செல்வது சுவாமிகள் வழக்கம் என்பதனையும் நோக்கிலர். இவற்றானே சுவாமிகள் கூற்றை இன்னோரன்ன இடங்களில் எடுத்தாள்வது பொருந்தாது. இவ்வாறெல்லாம் உண்மை நோக்காது வெற்றெனத் தொடுத்துச் செல்லும் தமது விஷயமே அவர் செவிக்கு இன்பம் பயக்கும்போலும்.

இன்னும், அவர் 'ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமானும் இதன் சிறப்பு நோக்கியே இதன் காண்டிகை விருத்திகளைத் திருத்தமுற அச்சிட்டனர்,'' என்றார். நாவலர் அவர்கள் விருத்தியுரையைப் பரிசோதித்தச்சிட்டனரா அல்லது திருத்தமுற அச்சிட்டனரா? சிறப்பு நோக்காவிடத்துத் திருத்தமுறாது அச்சிடுவாரோ? "இதன் காண்டிகை விருத்திகளை.........அச்சிட்டனர்" என்றார். நாவலர் அவர்கள் நன்னூன் மூலம் அச்சிட்டவாறேபோலத் தனித்தனியே அதன் காண்டிகை விருத்திகளை அச்சிட்டனரா? அவற்றை யாவரேனுங் கண்டதுண்டா? "கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும் அவற்றொடு வினாவிடை யாக்கலானும் சூத்திரத்துட் பொருள் தோற்றுவ காண்டிகை" ஆதலானும் "சூத்திரத்துட் பொருளன்றியு மாண்டைக் கின்றியமையா யாவையும் விளங்கத் தன்னுரையானும் பிறநூலானும் ஐயமகல ஐங்காண்டிகை யுறுப்பொடு மெய்யினை யெஞ்சாது இசைப்பது விருத்தி" ஆதலானும் நன்னூன் மூலம் வேறு அதன் காண்டிகை விருத்திகள் வெவ்வேறு என்பது தேற்றம். அவர "இதன் காண்டிகை விருத்திகளைத் திருத்தமுற அச்சிட்டனர்" என்றது நன்னூன் மூலத்தவை விடுத்து அதன் காண்டிகை விருத்திகளை மட்டும் அச்சிட்டனரெனப் பொருட்டுருமே யொழியு நன்னூன் மூலத்தோடு அதன் காண்டிகை விருத்திகளை அச்சிட்டனர் எனப் பொருள்தாராது. இனி இதனைக் காண்டிகை விருத்திகளோடு தனித்தனி அச்சிட்டனர் என்று தங்கருத்துப் பிழைபடாது எழுதஅறியாதவர் நன்னூல் இகழ்ந்தாரை மறுத்த மறுப்பிற்கு "நன்னூல்" என்று பொதுமொழி யிட்டனுஉம் ஒருவியப்பன்று.

இன்னும் அவர் "நன்னூலானைப் புகழ்ந்தாரையன்றி இகழ்ந்தாரை நாம் இற்றைவரை அறியோம்" என்று பெரும் பொய் புகன்

றனர். நன்னூலாரையும் அவரது கொள்கைகளையும் அவற்றை ஆதரித்தவர்களையும் ஆசிரியர் நச்சினார்க்கினியரும் பற்பலவிடங்களில் இகழ்ந்து மறுத்தனர். தொல்காப்பியனாரையும் நக்கீரனாரையும் நன்னூலாரையும் சின்னூலுரைகாரரும் பற்பலவிடங்களில் இகழ்ந்து மறுத்தனர். தொல்காப்பியனாரையும் நேமிநாதத்தாரையும் மயிலைநாதரும் பற்பல இடங்களில் இகழ்ந்து மறுத்தனர். நன்னூலாரையும் பிறநூலாரையும் பிரயோகவிவேக நூலாரும் பற்பலவிடங்களில் இகழ்ந்து மறுத்தனர். நன்னூலாரையும் இலக்கணவிளக்க நூலாரையும் இலக்கணக்கொத்து நூலாரும் பற்பல இடங்களில் இகழ்ந்து மறுத்தனர். நன்னூலாரையும், இலக்கணவிளக்க நூலாரையும், இலக்கணக்கொத்து நூலாரையும தொல்காப்பியனாரையும், நன்னூலாரையும் இலக்கணவிளக்க நூலாரும் பற்பல இடங்களில் இகழ்ந்து மறுத்தனர். பிறநூலாரையும் சுவாமிகளும் பற்பலவிடங்களில் இகழ்ந்துமறுத்தனர். பற்பல நூலாசிரியரையும் அரசஞ் சண்முகனாரும் பற்பலவிடங்களில் இகழ்ந்து மறுத்தனர். நன்னூலாரை நாவலர் அவர்கள் நன்னூற் பதிப்பை அனுஸரித்து பதிப்பவரும் (அந்நூற்குக் குற்றங் காட்டலின்) இகழ்ந்து மறுத்தனராவர். இவ்வனைவர் கூற்றுக்களுள்ளும் ஒன்றனையாவது அவர்கண்டிலேம் என்றனர். ஆதலின் மேற்காட்டிய ஆசிரியர்களால் இயற்றப்பட்ட நூல்களுள் ஒன்றேனும் அறிந்திலராவர் என்பது தேற்றம். இவ்வெல்லா நூலும் ஆராயவேண்டியது எம்மனோர்க்குக் கடமையாகுமேயன்றி அவர் போன்றார்க்கு இயற்கையறிவுண்மையின் ஆராய வேண்டற்பாற்றன்று போலும். அன்றியும் அவர் தமக்கு நன்னூலார்மேல் வைத்த மதிப்புக் கருதியோ எம்மேல் வைத்த கொதிப்புக் கருதியோ இவ்வெல்லாரும் நூலாசிரியரை இகழ்ந்திருத்தலையும் அறியாது போயினர். இனி நன்னூலார்மேல் வைத்த மதிப்புக் கருதியே எம்மை மறுத்தனரெனின் எமக்குமுன்னர் மறுத்த பலரையும் இவர் மறுத்திலாதலிற் பொருந்தாது. மேலும் எமது விஷயத்திற்கு இவ்வாறு பொய் [illegible]விடில் அதனைக் குற்றஞ்சாட்டி மறுக்கவொண்ணாது என்பது கருதியே இவ்வனைவர் இகழ்ச்சியையும் மறைத்தாரன்றி அறியாதிருக்கவில்லை எனின் அவ்வாறு அறிந்தவற்றை மறைத்துக்கூறுவது வஞ்சமாதலினாலும் கற்றார்க்கின்னோரன்ன இழிகுணம் இயையப்பெறின் அவர்கற்ற கல்வியும் கல்வியெனப்படாமையானும் பிறவாற்றானும் ஒழுக்கம் பிழையாத அப்பெரியார் அறியாமையால் உரைத்தனரேயன்றி வஞ்சத்தானுரைத்திலரென்க.

இன்னும் அவர் "பாரதியார் அவர்கள் போலவே இன்னும் பலர் சேனாவரையர் பரிமேலழகர் நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களையும் கண்டித்துப் பேர் படைக்கலாமென்று முன்னெழுந்தனர். எழுகின்றனர்" என்றார். இவ்வரிசை முதலில் உரையாசிரியர் சேர்க்கப்படாததற்குக் காரணந்தான் என்னை? இவ்வுரையாசிரியர்களின் வரிசை எம்முறை கருதி எவ்வணிக் கிலக்காயது? இங்குக் காட்டிய ஆசிரியரையும் இவர் போன்றாரையும் மறந்தவரும் சிவாநுபூதிச் செல்வரும் திராவிடமாபாடிய கருத்தரும் ஆகிய சுவாமிகளை இவ்வரிசையிற் சேர்க்காத காரணந்தானென்னை? அவ்வாறு சேர்க்காது செல்வது குற்றமாகாதா? "முதலிய வுரையாசிரியர்களையும்" என்ற சார்பாற் றழுவினேம் என்பாராயின் அவ்வாறு அப்பிரசித்தமுறத் தழுவுதற்குளதாம் காரணந்தான் என்னை? பலரும் இவ்வாசிரியர்களைத் தவிர்த்து வேறெவரையுங் கண்டித்தாரில்லையா?

இன்னும் அவர் "இவ்வகை வழூஉக்கள் வாராவண்ணம் தம் விஷயத்தை எழுதத் தெரியாத பாரதியாரவர்கள்" எனப் பின்னர்க் கூறினமை மறந்து "பாரதியார் முதலியோர் புதிய நூலுரைகள் இயற்றிப் புகழ் படைத்தால் என்னை?" என வினாவுதலும் அதற்கு விடையிறுத்தலும் குற்றம். விஷயம் எழுதத்தெரியாதவர் நூலுரைகளியற்றிப் புகழ் பெறுதல் கூடுமா? புதியனவாக நூலுரைகள் இயற்றாதவர் புகழ்பெறமாட்டாரா? சேனாவரையர் முதலிய சான்றோர்கள் பழையவுரைகளையே மாற்றி வேறு செய்யவில்லையா? அவ்வாறு செய்த அவர்கட்குப் புகழில்லையா? அவர்கட்குப் புகழில்லையென்பார் தமிழரெனப்படுவரா? புதிய நூலுரைகள் இயற்றாது பழையவாகிய நூலுரைகளைச் செவ்வனே பரிசோதித்து அச்சிடுவாரெல்லாம் புகழ் பெருதவரா?

இன்னுமவர் "வெளிப்படுத்தினார் பலராவர். இதற்குச் சான்றாக நன்னூலுடையாரையே இப்பொழுது ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது," என்றனர். இதிற் பலராவர் எனமுடித்து இதற்கெனச் சுட்டியதூஉம் வழூஉ "என்றார். வெளிப்படுத்தினார் பலராவர்" என்றதனுள் "வெளிப்படுத்தினார்" என்றதன் கண்ணமைந்த அகநிலைச் செயப்படுபொருளாகிய தொழிற் பெயரையே "இதற்கு" என்றது சுட்டியதறியாது "இதற்கெனச் சுட்டியதூஉம்

வழூஉ" என்றதற் குற்றம். "எடுத்துக்கொள்ளப்பட்டது என்பதற்கு எழுவாய் இன்றாகவும் வழூஉ" என்றார். காலங் கருதிவந்த எழுவா யுண்மை இதுபொழுதாவதறிவாராக. இதுபோன்றுவரும் அரிய விதிகளை அறியாதார் அறியாதார். சான்றாக என்ற இலேசினானே நன்னூலாரும் அவரோடொருவராவர் என்பது புலப்படவும் "நன்னூ லாரும் ஒருவர் என்பது தோன்ற வாக்கியம் எழுதப்படாமையும் வழூஉ" என்றதுங் குற்றம்.

இன்னும் அவர் "வினைமுதல் நான்கன் நிலைமை பெற்றமைக் கேற்பத் தொகைதழுவப்பெற்று எழுவாய் நிற்கும் உண்மை நோக் காது. "பெறும் என்பது எழுவாயின்றாதலும் வழூஉ" என்றதுங் குற்றம். இவ்வாறே ஆசிரியர் நச்சினார்க்கினியரும் "மேலனவற்றிற் கும் இது பொருந்தும்" என்றனர். ஈண்டு மேலனவற்றையும் இது பொருந்தும் என்னாது மேலனவற்றிற்கும் இது பொருந்தும் எனக் கூறியது நோக்கற்பாலது. "உயிருக்கு" என்றதனைக் கோளிப்பொரு ளாக்கினமைக்கேற்பச் செயப்படுபொருளை எழுவாயாக்கி இருத்தலின் "பெறும்" என்பது இயற்கையிலே செயப்படுபொருள் குன்றாவினை எனினும் ஈண்டுக்குன்றியவினையாகக்கோடல் ஆன்றோர் மரபென்க. இவ்வாறேவரும் "பொருந்தும்", "ஒக்கும்", "அடையும்" என்பன வற்றையும் ஆராய்ந்து உண்மையறிவாராக. இவ்வாறு வருவதனை வடநூலாரும் அகர்மக கருமம் என்பர்.

இன்னும் அவர் மெய்யானது மொழிக்கண் (அவ் என) உயிரை யும் "வவ்வென" உயிர் மெய்யையும் சார்ந்து வரினும் அண்டெல்லாம் மெய் அளவு பெறாது என்பது போதாக்கூறினமை நோக்காது "உயிர் மெய் மெய் சார்ந்து வருவது எவ்வாறு?" என்பன முதலாய பல வினாக்களை வினவினமையுங்குற்றம்.

இன்னும் அவர் சண்ணிமை முதலியன அவ்வவற்றைக் குறியாது ஆகுபெயராய் வேறு பொருள் குறித்து வந்தமை நோக்காது "அள வின் பெயர் கூறினார் அன்மையின் "அளவின் பெயர் கூறுவார் போன்று" என்றதூஉம் வழூஉ" என்றதுங்குற்றம்.

இன்னும் அவர் "ஏனைய மூன்றின் என்றார். இதிற்றாம் துணி யப்பட்டதாகக் கொண்ட மூன்றற்கும் முற்றும்மை கொடாமையும்

வழூஉ" என்றார். இதனுள் எம்மாற்றுணியப்பட்டது ஒன்றுமின்மையின் "தாம் துணியப்பட்டதாகக் கொண்ட சூன்றற்கும் மூற்றும்மை கொடாமையும் வழூஉ என்றதுங் குற்றம்.

இன்னும் அவர் "வானாச் சேறலின் என்பதிற் சகரமிக்கதூஉம் வழூஉ" என்றார். அவர் "இத்துணை பெருமை" என்றதற்குக் காரணம் உரைத்தபின்னர் உரைக்குதும்.

இன்னும் அவர் "தனித்தனி ஒவ்வொரு மெய்யெழுத்தின் அளவே அரை மாத்திரையாகும்" என்றார். "தனித்தனி ஒவ்வொரு" என்பவைகளில் ஒன்றே அமையும் இரண்டுங் கூறியதும் வழூஉ" என்றார். ஒவ்வொரு மெய் என்று ஒன்றே கூறின் மொழியிடைகளில் மெய்யெழுத்துக்களையும் எழுத்துக்களாக எண்ணுவது பெரும் வழக்காதலின் அவ்வெழுத்துக்களுக்கும் இவ்வளவு சேறுமாதலினும் பிறவாற்றானும் ஒவ்வொரு மெய் என்பதும் போதாது தனித்தனி என்பதும் வேண்டற்பாற்று என்பதனை நோக்காது "ஒன்றே அமையும் இரண்டும் கூறியதும் வழூஉ" என்றதும் குற்றம். இவ்வாறே அவர் பற்பல வீண் குற்றங்கள் இயைத்துச் செல்கின்றனர். அவ்வாறவர் கூறுவதற்குக் காரணம் அறியாமையே கந்தாகக் கொண்டனர் என்றும் என்மேல் வைத்த கொதிப்பு முதலியவைகள் காரணமாகாவெனவும் அறிஞர்கள் கருதி மன்னிப்பாராக. இவ்வாறு வரும் அரிய விதிகளைத் தாம் அறியாதிருந்தமை யுணர்ந்து நம்மனைவர்க்கும் மேம்பட்டாராகிய ஸ்ரீமத் அ. குமாரசுவாமிப் புலவர் அவர்களிடத்தாவது அவற்றை வினவி அறிதல் கூடாதா?

இன்னும் அவர் "'எழுத்தெனப்படுப" என்ற சார்பானும் பிறவாற்றானும் ஆசிரியர் என்பவர் இவரே என்பதுட் புலப்பட்டும் "ஆசிரியர் இன்னாரெனத் தெரித்துக் கூறாமையும் வழூஉ" என்றதுங்குற்றம் இதற்குக் குற்றங் கூறியவர் "வடவேங்கடந் தென்குமரி" என்ற பெரியார் சூத்திரத்தில் நூற் பெயர் நேரே கூறப்படவில்லை என்று குற்றமேற்றுதலுங் கூடுங்கொல் என்று மிகவும் அஞ்சுகிறேன்.

இன்னும் அவர் ""அம்முதலீராறுவி" என்ற சூத்திரத்திற் கமைத்த குற்றங்கள் இவை என அறியாது மறுக்கத் தொடங்கியதுங் குற்றம்.

இன்னும் அவர், "வல்லினங் கசடதபறவெனவாறே" என்பன வாதிய சூத்திரங்களுள் என என்றதனை எண்ணுப் பொருளாகக் கருதியே இனம் என்றதற்குக் குற்றமேற்றியதை அறியாது "என என்பது எண்ணுப்பொருளில் வரும் என்பது பாரதியார் அவர்களுக்குத் தெரிந்திலதுபோலும்" என்பார் "அம்முதலீராறாவி" "புள்ளிவிட்டவ்வொடு" முதலிய சூத்திரங்களுக்கு அமைத்த குற்றங்கள் இவ்விலை என அறியாது பற்பல கூறி மறுப்பதும் ஒரு பெரியகாரியமாகுமா? இனி, சூத்திரங்கட்கு மயிலைநாதருரைத்த உரைகளை விருத்தியுரைகாரர் கொள்ளாது வேறுரை கூறினாராதலின் அவருரை நோக்குமாறும், அவ்விருத்தியுரைகாரர் கூற்றைக்கொள்ளாது செல்லுமாறும் எமக்குக் கட்டளை இடுகின்றனர். இன்னும் பெரியாரைத் தூஷிக்குந்தன்மை இல்லாதவர் போன்று நடித்தும் எம்மனோரை இகழ்ந்தும் செல்கின்ற அத்தூய்மையாளர் ஈண்டெம்மை மறுத்தற்குக் கருவியாகாது பிரதிகூலமாயமைந்த விருத்தியுரையை மறுக்காதவர் போலப் பதுங்கி ஒதுங்கியும் மயிலைநாதருரையை ஈண்டெம்மை நோக்கச் சொல்லியதூஉம் நோக்கற்பாலது. இனி அச்சூத்திரங்கள் எண் என்னும் பகுதியில் வந்தமையால் அவற்றிற்கு மயிலைநாதருரைத்தாங்கு உரைப்பதுவே பொருத்தமென்பாராகில் "இனம்" என்றதற்கு இடர்ப்பட்டுப் பொருள்கொள்வது குற்றமாகுமேயொழிய அழகாகாமையானும், நன்னூலார் "ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்" என எண் காட்டாது வாளாகூறியும் "முந்நூற்றெழுபானென்ப" எனத்தொகைப் பின்னர் "என்ப" என்று இணைத்துக்கூறியும் வகைச்சூத்திரங்கட்கு மாற்றிக் கூறியுஞ்செல்கின்றனர் ஆதலின் அவர்க்கும் அது கருத்தன்றென்க. மேலும் மயிலைநாதருரைத்தவுரை இடர்ப்பாடுடையது என்பதனை உய்த்துணர்ந்தறிக.

அவர் எம்மைத் "தலைத்தமிழ்ப்பண்டித"ரென்றமை எவ்விலக்கணங் கருதிவந்தது?

இனி நன்னூற்சூத்திரவமைதியை யாராய்வாம்.

நன்னூலார் "புள்ளிவிட்டவ்வொடு" என்ற சூத்திரத்தில் புள்ளி விட்டதனால் வந்த வுரு என்னாது "முன்னுருவாகியும்" என்றதுங் குற்றம். உயிர்மெய் இருவகையாகத் திரிந்துபிறக்கும் என்ற ஆசிரியர் கொள்கையை அறியாதவராய் "ஆகியும்" "திரிதலும்" என வாளாவிட்டமையுங் குற்றம். பிறவு மன்ன.

இன்னும், அவர் "மொழியாய்த் தொடரினு முன்னிலைத் தெழுத்தே" என்றதும குற்றம்; என்னை? மெய்க் களவு மொழியிடை யின்மையாலும் அவர்செய்யுளியலையு நோக்கிச் சிலவற்றைக் கருதி செப்தமை நோக்காமையாலும் பிறவாற்றாலும் என்பது. இவற்றின் விரிவை எமது "தொல்காப்பியமும் பிற்காலத்தாரும்" என்ற விஷயத்திற் கண்டுகொள்வாராக.

இவ்வாற்றாலும் பிறவாற்றாலும் எமது விஷயங்கள் எல்லாம் குற்றமற்றனவென்று தெற்றென வுணர்வாராக.

இங்ஙனம்,

K. S. நவநீதகிருஷ்ணபாரதி,

தலைமைத்தமிழ்ப்பண்டிதன்,

ஸ்ரீ ராமநாதவித்யாலயம், சுன்னுகம், யாழ்ப்பாணம்.

௨

# முழவம்.

'எக்காலத்தும் யாவராலும் வெறுக்கப்படாதது பாலும் இன்னிசையும்' என்றனர் ஒருபெரியார். இன்னிசையானது மிடற்றுக்கருவியாலும் தோற்கருவியாலும், துளைக்கருவியாலும், நரப்புக்கருவியாலும், இன்னும் பலவழியாகவும் பிறக்கும். நரப்புக்கருவி எத்தனையோ உண்டு. அதேபோல் தோற்கருவியும் பலவாம். தோற்கருவிகளில் பலவற்றை நாமறிவோம். அறியாதன பலவாம். அறிந்தவை தண்ணுமை என்ற மிருதங்கம் அல்லது மத்தளம், டோலக், பறை, முரசம், பேரி முதலியனவாம். அறியாதன இடக்கை, படகம், சல்லரி, கைத்திரி, முழவம் போன்றனவாம்.

முழவம் என்ற பதத்திற்கு யாழ்ப்பாணத்துச் சதுர அகராதியிலே குடமுழா, பறை, முரசம் என்று எழுதப்பட்டிருக்கிறது. 'குடமுழா நந்தீசனை வாசகனாகக்கொண்டார்' என்று திருவாசகத்திற் காணப்படுகிறது. 'முழவதிர' என்று புறநானூறு முதலிய சங்கச் செய்யுட்களில் பயின்று வருகின்றது. முழவு என்பது முரசமாயிருக்கலாம். முழவம் முரசோ வென்பது ஐயப்பாடுடையதாம்.

கல்லாடம் 10-வது செய்யுளிலே,

தடாவுட லும்பர்த் தலைபெறு முழவ
நான்முகந் தட்டி நமோக முரப்ப

என்று காணப்படுகிறது. இதற் குரைகண்டார், 'பெரிய வுடலின்மேல் தலைபெற்ற முழவம் என்னும் வாச்சியம் நான்கு முகமும் நடு முகமும் தட்டுதலால் ஒலியைப் பண்ணுகிற்ப' என்று விளக்கியுள்ளார்கள். இவ் வாச்சியமானது மிகவும் அருகியே காணப்படுகின்றதென நினைக்க வேண்டியிருக்கின்றது. இதனைப் பஞ்சமுகவாத்திய மெனவும் கூறுவர்.

இது வெண்கலத்தினாலே பெரிய பீப்பாய் வடிவாகச் செய்யப்பட்டு நான்கு திசைகளிலும் உடுக்கையின் ஒருபுறத்தை யொத்த வாயினை யுடையதாயும் நடுவில் புறங்களிலிருப்பதைவிடப் பெரிதானவாயை யுடையதாகவும் செய்யப்பட்டிருக்கிறது. இதற்குமேல் மான்றோலினால் மூடப்படுகிறது. இதனை வாசிக்கும்போது 'இருகைக்குவிந்தகொட்டுடைத் தண்ணுமை' யின் ஒலியையும் அக்ஷரங்களையுமொப்ப வாசிக்கப்படுகிறது.

'கொய்புலா மலர்ச்சோலை குயில்கூவ மயிலாலுமாரூர' ரது சந்நிதியில் இவ்வாச்சியம் ஒன்று உளது. இதன் தமிழ்ப்பெயரால் இது வழங்கப் படாமற்போயினும் பஞ்சமுக வாத்தியம் என்ற பெயராலும் குடமுழா என்ற பெயராலும் வழங்கப்படுகிறது. 'செய்யிற் சிறந்த செல்வேலியாயிரமுடைய' நாதனான ஸ்ரீ தியாகப்பெருமானுக்குத் திருவந்திக்காப்புக்கு முன் பணிசாத்தியருளும்போது இவ்வாச்சியம் வாசிக்கப்படவேண்டுமாம். இவ்வாச்சியம் இன்னும் அநேகவிடங்களில் இருக்கலாமாகையாலும் இது போன்ற பல நாமறியாவாச்சியங்களும் இருக்கலாமாகையாலும் அவற்றை வெளியிடவேண்டி இக்குறிப்பை எழுதினேன்.

இலக்கணவிளக்கபரம்பரை,
திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

---

உ

சிவமயம்.

## *திருக்கச்சிநெறிக் காரைக்காட்டுச் சிலாசாசனங்கள்.

“சத்தியவிரதங்காரைத்தருவனஞ்செறிதலாலே
சித்திசேர்ந்தவர்க்குநல்குந்திருநெறிக்காரைக்காடென்
றித்திருப்பெயரினோங்குமென்பரான்மாசுதீர்ந்த
வுத்தமக்கேள்விசான்றவுணர்வுடையும்பர்மேலோர்”:— என்ற

காஞ்சிப்புராணச் செய்யுள் சத்தியவிரதத்தலம் திருநெறிக்காரைக்காடென்ற சிறப்புப்பெயரெய்தியகாரணத்தை விளக்குகின்றது. சங்கநூல்களிலும், பழைய கல்வெட்டுகளிலும் கடலை ஆடையாகவுடையதனால் “கடற்கச்சி” என்று சிறப்பிக்கப்படும் காஞ்சிமாநகரத்தின் பாக்த மேற்த்திசையில் சத்தியவிரதக்ஷேத்திரம் உள்ளதென்று வடமொழிக் காஞ்சிப்புராணங்களில் சிறப்பிக்கப்பட்டுள்ளது. இதன் பழமையை இந்த க்ஷேத்திரத்தின்கண்ணுள்ள ஒரு பழங்கோயிலில் வெட்டப்பட்டுள்ள சிலாசாசனங்களினால் அறிதல் சுலபம். இக்கோயிற் கல்வெட்டுகளை அதிக கஷ்டப்பட்டு இவண் உள்ள ஒரு இராஜவைத்தியரும், சிறந்த ஜோதிடரும், சிலாசாசன ஆராய்ச்சியிலேயே தம்முடைய வாழ்நாளைப் பல்லாண்டுகளாய்க்கழித்துவருபவருமான திரு. சுப்பிரமணியதேசிகரென்பாரைக்கொண்டு முறையே பரிசோதித்தமையால் ஷை யார்மனமுவந்து எழுதிய முகவுரையையே இதற்கு ஆரம்பமாக எழுதியிருக்கிறேன். ஷை க்ஷேத்திரம் திருஞானசம்பந்தப் பெருமானால் “வாரணவுமலை மங்கை பங்கினர்” என்று எடுத்த திருப்பதிகம் பெற்றுளது. இத்திருநெறிக்காரைக்காடு தொன்றுதொட்டு ஒப்பற்ற தனி சுரோத்திரிய கிராமமாகவும், ஷை தேவஸ்தான கிராம ஆதீனமானது “திருக்கச்சி வேளாஞ்செட்டி மக்கள்” என்ற சிவபக்தியிற் சிறந்த சைவச்செட்டிமார்களின் தருமபரிபாலனத்திற்குள் அன்றுமுதல் இன்றுவரை இருந்து வருகிறது. ஷை க்ஷேத்திரத்தில் திருஞானசம்பந்தப்பெருமான் இக்காஞ்சிமாநகரில் விஜயஞ்செய்தகாலத்துச் சிலநாட்கள் வீற்றிருந்தனரென்பதையும்; ஷை ஆதீனத்தின் பழமையையும் பின்பு தெளிவாய் எழுதுகிறேன்.

* காஞ்சிபுரத்தின் மேற்குப்பாகத்திலுள்ளது. ரயிலடிக்குச் சமீபம். செங்கற்பட்டிலிருந்து காஞ்சிபுரம் வரும் ரயில்பாதைக்குத் தெற்கு.

இந்த ஸ்தலத்தில் பூசைசெய்து புதன் கிரகநிலையைப்பெற்றதும் தவிர, ஆண்டுள்ள சிறந்த தெளிந்த தீர்த்தத்தில் தன்வாரமாகிய புதவாரத்தில் படிந்து மூழ்கினவர்கள் இரட்டிப்பான பயன் அடையவும் வேண்டி வரம்பெற்றான். சிபி எனும் இந்திரன் பூசைசெய்து காணாபத்தியம் பெற்றதோடு அங்குள்ள தீர்த்தம் இந்திரதீர்த்தமென்றும், அந்நகர் இந்திரபுரமென்றும் விளங்கவேண்டி வரம்பெற்றான்.

## முகவுரை.

---

(1) திருக்கச்சி நெறிக்காரைக்காட்டு மடமுடைய மகாதேவன் உத்தமசிதனான திருக்காரைக்காட்டுப் பிச்சன் (2) கையாலித்தேவன் கோயில் கல்வெட்டுகள்.

### தமிழ்ச்சிறப்பு.

உலகந்தோன்றி மக்கள் பெருகிய முதற்காலத்திலேயே சீரும் சிறப்பும் வாய்ந்த அரும் பெறல் உயரிய மொழி "தமிழ்" ஒன்றேயாம். அதனிடத்திருந்தே நாள் செல்லச்செல்லப் பலமொழிகள் தோன்றின. இவ்வினிய மொழியின் சொற்கள் திரிந்தாயினும் திரியாதாயினும் வழங்காத மொழிகளே உலகத்தில் இல்லை. அவைபிற்றினைச் சீனம், பார்சீ, மலேயம், சையாம், சாவகம், சிங்களம், அரேபியம், இலேடின், யவனம், எப்ரூஉ, முதலிய பல வெளிநாட்டுமொழிகளிலேயே காணலாம் என்றால் நம் பரதகண்டத்தின் மொழிகளைப்பற்றிச் சொல்லவேண்டுவதின்றென விடுத்தாம். ஒவ்வொரு சொற்களும், தமிழினின்று திரிந்தாயினும் திரியாதாயினும் வெவ்வேறு மொழிகளுட் சென்று வழங்கி வருகின்றதை எடுத்துக்காட்டுவதென்றால் உரைபெருகுமென்று இத்துடன் நிறுத்துகின்றோம்.

### தேசசரித்திரங்கள்.

ஒவ்வொருதேயத்தின் சரிதங்களும் அவ்வந்நாட்டு மொழிகளிலேயே அவ்வந்நாட்டுப்புலவர்களால் எழுதப்பட்டு வழங்கிவருகின்றன.

---

(1) திருக்காலிக்காடென்று வழங்கும்.

(2) திருக்காலீச்வரரென்று வழங்கும்.

அன்றியும் அநாகரிகநாட்டினர்செய்திலை நாகரிகநாட்டினர் தம்மொழியில் எழுதியனவும் சிலவுண்டு. மேலும் நந்தமிழ்நாடோ, பண்டைய பொழுதத்தில் பரந்த இடத்தினையுடையதாய்ச் சிறந்த பெரும்புலவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற அரிய பெருஞ்சங்கங்களினால் பல்லாயிரம் யாண்டுகட்கு முந்தியே சிறப்புற்றிருந்தது. நம் தமிழ்மொழியில் நம்நாட்டின் சரிதங்கள் பல முன் வழங்கிவந்தன. நம்நாட்டிற் பல வேற்றுமொழிமாக்கள் அடிக்கடி குடியேறியதனாலும், அமண், புத்தம், ஆருக்கம், முதலிய சமயிகளின் அரசு நிலையூன்றியபடியினாலும், நம்மொழியில் பல வரலாறுகளையுடைய அரியநூல்கள் அழிவதற்கு இடமாயிற்று. அதன்றியும், நம்நாட்டில் உள்ளவர்களுள், சிலர் * ஆரியப்பித்தேறித் தமிழ்ச் சரிதங்களைத் தம் மனம் போனவாறு புனைந்துகட்டி வியாதரின் பதினெண்புராணங்களுள் நுழைப்பித்தும், தனித்தனி புராணங்கள் எழுதுவித்தும் கெடுக்கலாயினர்.

உதாரணமாக:—“காஞ்சிபுரத்திற்கு மேற்கிலுள்ள காவதிப்பாக்கம் பன்றீச்வரம் கோயிலுடையார் பெயராகிய “பன்றீச்வரர்” என்பது மாறி, “பஞ்சீச்வரர்” ஆகி, ஆங்குள்ள ஒருவரால் “பஞ்சவர்ணீச்வரர்” என்றுதிருத்தப்பட்டு ஆரியப்பாடலில் ஏறிற்று. இம்மாதிரியே ‘செஞ்சி’ என்பது ‘சஞ்சீவிமலை’ யென்றும் அஃது அநுமான் கொணர்ந்ததென்றும், கதை ஏற்பட்டு அச்சுவாகனமேறியு முள்ளது. இம்மாதிரியான எத்தனையோ மாறுதல்கள் யான் பார்வையிட்ட இடங்களில் வழங்குவதாயின.

நிற்க; பலஇடையூறுகள் நம் தமிழ்மொழிக்கு ஏற்பட்டிருப்பினும் இன்றும் அழியாது பலசரிதங்களை விளக்குவதற்குக் கருவியாயுள்ளன சங்கநூல்களும், திருமுறைமுதலியனவும், கல்வெட்டுகளுமேயாம். அவற்றின்கொண்டு பழைய சரிதங்களை ஒருவாறு குறித்துணரலாம். மேற்குறித்த வழிகளால் ஆராயப்புகின் காஞ்சிபுரம் ஆரியநூல்களாகிய பதினெண்புராணங்களினும், தமிழ்ச்சங்கநூல்களினும், பல்லிடங்களுள் வியந்து கூறப்பட்ட பல பெருமைகள் வாய்ந்துள்ளதென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும். வடமொழி நூல்களில் காஞ்சிபுரம் பழமையுடையதெனவும் “நகரேஷு காஞ்சி”

* மிகுந்த ஆரிய பாஷாபிமானங்கொண்டு.

எனவும் சிறப்பிக்கப்பட்டும் இருக்கின்றது. சங்கநூல்களுள்ளும், பழைய கல்வெட்டுகளிலும் 'கடற்கச்சி' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. "தழுவக்குழைந்தான் மடத்துப்பட்டயத்துள் தொண்டைமான்கள், பல்லவர்கள் முதலாயினோர்களால் எடுப்பிக்கப்பட்ட பல தளிகளைக் கூறுகின்றமையாலும் அவைகள் தற்போது பாடப்பட்டுள்ள காஞ்சிப்புராணங்களுள் இல்லாமையினாலும் மேற்படி புராணங்கள் சுமார் 200, 300 ஆண்டுகட்கு முன்னர்த் தோற்றினவென்று ஊகிக்கப்படுகின்றது.

## திருநெறிக்காரைக்காட்டுச்சிறப்பு.

*கரிகாற் சோழன் காட்டை அழித்து கிராமமேற்படுத்திய போழ்து காரைச்செடிகள் பொருந்தியிருந்தமையால் இப்பேர் பெற்றதுபோலும். சுமார் மூவாயிரத்துநானூறாண்டுகட்குமுன் அரசாண்ட கோச்செங்கணான் எனும் சோழனைப் பலபாடல்களுள் வியந்து கூறியிருப்பதால் ஞானசம்பந்தப் பெருமான் காலம் 3400 யாண்டு ஆகின்றமை பல்லாற்றானும் ஆராயற்பாலது. அவை இன்னும் சில நாட்களுள் வெளிவரும். 3400 ஆண்டுகட்கு முன்னர் வீற்றிருந்த திருஞானசம்பந்தப் பெருமானால் இக்காரைக்காட்டில் மடமுடைய மாதேவன் உத்தமநிதனை திருக்காரைக்காட்டுப் பிச்சன் கையாளித்தேவர் என்ற திருநாமம் வாய்ந்த சிவலிங்கமூர்த்தியார் பாடப்பெற்றிருக்கின்றமையால் அவர் காலத்திற்கு முன்னரே இக்கோயில் உள்ளதென்றுணர்க. இக்கோயிலுள் இராஜராஜ சோழன், அதிராஜேந்திர சோழன், ராஜேந்திரசோழதேவன், குலசேகரதேவன் முதலாயின அரசர்கள் காலத்து வெட்டப்

---

(* "காடுகொன்று நாடாக்கிக்
குளந் தொட்டு வளம் பெருக்கிப்
பிறங்கு நிலைமாடத் துறந்தை போக்கிக்
கோயி லொடு குடிநிறீஇ
வாயிலொடு புழையமைத்து
ஞாயில் தொறும் புதை நிறீஇ" என்ற பட்டினப்பாலைச்

செய்யுளால், ஓர்காலத்து இந்நகர் கோயில், குளம், குடிவளத்தோடு விளங்கியிருந்தது என்பது அறியக்கிடக்கின்றது. காலக்கேட்டினால் காடாயிருந்ததைக் கரிகாற்சோழன் கண்ணுற்றகாலத்துக் காட்டையழித்து நாடாக்கி அவ்வூர்விட்டு வெளியேறிய குடிகளைத் திரும்பவும் குடியேற்றிக் கோயிலையும் சீர்படுத்தி அவ்வூருக்கு ஜலாதாரமும் ஏற்படுத்தியதும் இப்போது இத்தலத்தைக் கண்ணுறும் அன்பர்களுக்கு நன்குவிளங்கும்.

பட்ட பல கல்வெட்டுகள் உள்ளன. அவர்கள் காலத்து, எயில்கோட்டத்து எயில்நாட்டுச் சிறுகச்சிப்பேட்டிலும், ஊற்றுக்காட்டுநாட்டு, உத்தமசோழச் சதுர்வேதிமங்கலத்தும், சீபுரநாட்டு, பராந்தகச் சதுர்வேதிமங்கலத்தும், கான்றூர்நாட்டு மழலமங்கலத்தும், புரிசைநாட்டு அபராஜிதச் சதுர்வேதிமங்கலத்தும், நீர்வேளூர்நாட்டுத் திங்காபொக்கமான சோழநிவாகம் நல்லூரிலும், காவியூர்க்கோட்டத்து ஓரிருக்கையூரிலும், தமனூர் நாட்டு அவ்வண்ணூரிலும சபைகள் இருந்தனவாயும் அவற்றுள் உள்ளார் ஷை கையாலி மகாதேவர்க்கு நித்த நிபந்தங்கட்கு வேண்டும்நெல்லும், காசும், பதரும், வாலும், பூழ்தியும், நீக்கி, உலகு பாற் கூலியும் அவர்களேபட்டுத் தூய்மையுள்ளதாகக் கொடுவந்து ஷை திருக்காரைக்காட்டு மடமுடைய நாயனூர் திருமுற்றத்தே ஆண்டாண்டுதோறும் அருமொழித்தேவன் மரக்காலால் அளக்கக்கடவதாகவும், இன்னும் திருநந்தா விளக்குகட்குப் பொன்னும், பசுவும், ஆடும் கொடுத்து செய்யைத் திருவேகம்பராமிபால் ஸ்தானபதிகள் பக்கவில் திங்கள் தோறும் அற அட்டக்கடவதாகவு மன்றாடிகள் முதலாயினரை ஏற்படுத்தினவும் விளக்கும். இன்னும், திருமெய்க்காவலும், மாகேச்வரர்கட்குணவும் நித்திய அமுதுபடைப்புக் கட்டளையும், கொண்டுள்ள சாசனங்கள் பல உள. இத்தானத்துள்ள, "நறுஅணிஞ்சான்" திருமடம் எனப் பெயரிய திருமடத்தின் இயல்பும் விளக்கும்.

*திருமயானத்திற்குக் கிழக்கில் இருந்த பெரியமண்டபம், கங்கைகொண்டசோழன்மண்டபம் எனப் பெயர்வழங்கினதாகப் பல்லூர்களின் கல்வெட்டுகளில் புலப்படுவதோடு இக் கைப்பாவினாயனூர் கல்வெட்டாலும் அறியக்கிடக்கும். பருப்புப் பொங்கலுக்குக் "கும்மாயம்" என்று கூறிய அரியசொல் இக்கல்வெட்டின் போதரும்.

இக்கல்வெட்டுகளால் அக்காலத்துத் தமிழ்வகுப்பார்களின் பாகுபாடும், அரசர் இயல்புகளும், தன்மாசனத்து அறமுறைநடாத்துமியல்புகளும், பார்ப்பனர், அறிவர், அரசர், குறுநிலமன்னர்களாகிய வேளிர்கள், வணிகர், வேளாளர், முதலாயினோர்களின் செய்திகளும், திருநாள், அமுதுபடைப்பு, விளக்கிடு, மாகேச்வரர்கட்கு உணு, மடத்தியல்பு, முதலிய பலசெய்தியும் விளக்குமென்க. அக்காலத்துத் தமிழ் அரசர் முதலாயினோர்கள் ஒவ்வொரு காரணத்தினால் ஒவ்வொருகோயிலைத்

* திருக்கச்சியேகம்ப முடையார்கோயிலினுள் உள்ள ஒரு சிவஸ்தலம்.

தாபித்தார்களாதலால் வெவ்வேறு பொருட்டால் ஏற்படுத்தப்பட்ட கோயில்களின் பழையசரிதங்களை விளக்க அவ்வக்கோயில்களின், கற்சுவர், தூண், கோபுரவாயில் முதலியஇடங்களுள் அவ்வச்சரிதங்களை *ஓவிய உருவாகச் சித்திரித்துவைப்பது வழக்கம். அவைகள்தாம் பிற்காலத்துச் சரிதமெழுதுவோர்க்குப் பயன்படுகருவியாயின. அம் மாதிரி இக்கோயிலின் வாயின்மாடத்துக் கற்றூணில் பக்கங்களில் இந்திரன், பிரமன் முதலாயினோர்சித்திரம் சிவபெருமானைப் பூஜிப்பதாக எழுதப்பட்டுள்ளது. அதுவே, பிற்காலத்து, சரிதம் எழுதினோர் இந்திரனால் பூஜிக்கப்பட்டபடியினால் இந்திரபுரமென்று இக் காரைக்காட்டுக்கு ஒருபெயர் இட்டுப் புராணமும் எழுத இடந்தந்தது என்க. விரிவஞ்சி இம்மட்டோடு நிறுத்துகின்றும். அன்பர்கள் மன்னிக்கவும்.

(Sd.) திரு. சுப்பிரமணியதேசிகர்,
சிலாசாசனபரிசோதகர்.

இக்காலத்தில், முகவுரையிற் கண்டவாறு சிலாசாசனங்களும் பழங்கோயில்களுமே சரித்திரவாராய்ச்சிக்குச் சிறந்த பயன்படுகருவி என்பதைக் கற்றறிந்த மேதாவிகள் பலமுறையும் புகன்றனார்கள். அவைகளை அன்போடெடுத்துத் திறமையோடு சீர்தூக்கிப் படித்து அதன் உண்மைகளை நன்குஆராய்ந்தால் செவ்வினே இந்த தேசசரித்திரங்களைக் கோர்வையாக எழுத மிகவும் பயன்படும். இம் முகவுரையை மனமுவந்து ஆழ்ந்த அறிவுடன் அளித்த தேசிகர் அவர்களுக்கும், இதை ஏற்று உலகத்தாருக்கு ஊட்டும் இச்செந்தமிழ்க்கும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். அடுத்த சஞ்சிகைகளில் முறையே சோழசாசனங்கள் தோன்றி வெளிவரும்.

---

*இப்பழங்கோயிலின் கற்றூணிற்கண்டதுமே அல்லாது இத்தலம் மேற்குத் திருமுகமாதலால் ரிஷிகோபுரத்து மேற்குப்பக்கத்தில் முதல் நிலைக்குக் கீழ்உள்ள கற்கதவ் பட்டைவரிசையில் உள்ள ஓவியங்களினால் அறியக்கிடக்கும் விஷயம்:—வடக்கு முனையில் சிவபெருமான் உமாஸஹிதராய்த் திருக்கைலாய மலையின்கண் வீற்றிருக்கக் கணங்கள் தொழுதுநிற்கும் திருவுருவம். அதற்குத் தெற்கில் இரண்டு பக்தர்கள் சிரமேற்கூப்பிய கரத்தினராய் நிற்கும் திருவுருவம். தெற்கு முனையில் அவ்விருவரும் தங்கள் கரங்களை மார்போடமைத்து அஞ்சலி அஸ்தராய்ச் சிரசு வடக்குக்குனிந்த உருவங்கள். அவற்றின்பக்கத்தில் இவர்களுக்குக் காட்சிகொடுத்த விடைத்தனிப்பெருமானாய சிவபெருமான் நின்ற திருவுருவம். இதன் மத்தியில் சிவபெருமான் அம்பிகாஸமேதராய் ரிஷபாரூடராய்ச் சிவகணங்கள் குடைபிடிக்க இருவரில் ஒருவருக்குக் காட்சிகொடுத்தல்; இவை உள்ளன.

# திருக்கச்சிநெறிக்காரைக்காட்டுச் சிலாசாசனங்கள்.

ஜெயங்கொண்ட சோழமண்டலத்து எயில்கோட்டத்து எயில் நாட்டு நகரம் காஞ்சிபுரத்து திருக்காரைக் காடுடைய மகாதேவர்க்கு திருவாராதனை செய்யும் சிவப்பிராமணர்க்கும், பரிசாரகஞ்செய்யுஞ் சிவப்பிராமணர்க்கும் ௸ மகாதேவர் பண்டாரத்து நெல் அளக்கக் கடவதாக உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் திருவாய் மலர்ந்தருளிய திருமுகப் பிரசாதம்:—

கருவில் குமுதப்படை தென்மேல்.

திங்களேர்தருதன் தொங்கல்வெண்குடைக்கீழ், நிலமகள் நிலவ மலர்மகள் புணர்ந்து, செங்கோலோச்சிக் கருங்கலிகடிந்து, மன்னு பல் லூழியுட் டென்னவர் மூவருள், மாசாபரணன் பொன்முடி ஆகாப்பரும மிட் பசுந்தலைப் பொருகளத்தரிந்து, வீரகேரளனை ஆனைக்கிடுவித்து அசைசில் சுந்தரபாண்டியனைத் திசைகெடத், தொல்லையில் முல்லையூர்த் துரத்தி ஒல்கலில், வேணாட்டரசைச் சேணாட்டொதுக்கி, மேவுபுகழிராமகுட மூவர்கெட மூநீர்த்து, வேலைகொழு காந்தளூர்ச் சாலை கலமறுப்பித்து, ஆஹவமல்லனும் அஞ்சகெவுதன், தாங்காநம் படையின் ஆங்கவன் சேனையுட், கண்டப்பையனும் கங்காதரனும், வண்மாகளிறொடும் மடியத்திண்டிறல், விருதர விக்கியும், விசையாதித்தனும், கருமுரட்காங்கப்பனு முதலினர் சாம்ப.............மன்னோடு கரிபுரவியொடு பிடித்து, தன்னாடையில் ஜயங்கொண்டொன்னார், கொள்ளிப்பாக்கை யுள்ளெரி மடுப்பித் தொருதனித்தண்டாற் பொருகடல் உடுத்த, இலங்கையர்க்

* செங்கல்பட்டு ஜில்லா, காஞ்சிபுரம் தாலூகா, 87 நெம்பர் சுரோத்திரிய கிராமம். திருக்காரைக்காடு என்று தற்காலத்து வழங்கும் முறை. சுரோத்திரியதார் ௸ கிராமத்தில் கோயில்கொண்டுள்ள திருக்கையாலித் தேவர் எனும் ஸ்ரீசத்தியநாதேச்வரர். ௸ தேவஸ்தான ஆதின தர்மகர்த்தர்கள் காஞ்சிபுரத்துச் சைவ வேளாஞ்செட்டிகள் அனைவரும். பழைய உத்சவ மூர்த்திகளும் உள்ளார்கள்.

இறைவன் அலங்கமுடியறிந்து, முன்தனக்குடைந்த தென்தமிழ் மண்டல, முழுவதும் இழந்த எழ்கடலிழிய, புக்கிலங்கேசனுகிய விக்கிரம பாண்டியன் பருமணி முடிதடிந்திசை வில்லவர் மீனவர் வெஞ்சினச் சளுக்கியர் வல்லவர் முதலினர் வணங்க வீற்றிருந்த ஜயங்கொண்ட சோழன் உயர்ந்த பெரும்புகழ் கோராஜகேசரிவர்மனுன உடையார் ஸ்ரீ ராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு இருபத் தெட்டாவது ஜயங்கொண்ட சோழமண்டலத்து எயில்கோட்டத்து நகரம் காஞ்சிபுரத்துத் திருக்காரைக்காடுடைய மகாதேவர்பண்டாரத்து.

பிராமண வர்களிலார் ஆண்டுவரையும் பொலியூட்டால் அளக்கக்கடவ நெல்லுக்கே செலவுபெற உடையார்க்கு திருவாராதனைசெய்யும் சிவன்பிராமணர் இருவர்க்கு பேரால் நிசதநெல்லு தூணியும், பரிசாரகம்செய்யும் சிவப்பிராமணர் நால்வர்க்கு பேரால் நிசதநெல்லு பதக்குமாக அவர்கள் அளக்கக்கடவ நெல்லுக்கே செலவுபெற இடுவதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டுவித்து இடுவதாக உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் திருவாய்மொழிந்தருளி அதிகாரிகள் சோழபாண்டிய மூவேந்த வேளார்க்குத் திருமுகம் பிரசாதஞ்செய்தருளினர். இப்படிக்குத் திருவேகம்பம் உடையார் கோயிலுள்ளிட்ட ஸ்ரீகோயில்கள் ஸ்ரீகாரியம் பார்க்கின்ற சொச்சிக்கிழான் நம்பன் சீராளனை எவ்எயில் கோட்டத்து எயில்நாட்டு சிறு கச்சிப்பேடு சபையார் கடவ நெல்லுக்கு செலவு பெறக்கடவ:—திருவாராதனைசெய்யும் சிவப்பிராமணன் ஒருவனுக்கு நித்தநெல்லு தூணியாக நெல்லு நூற்றிருபதின்கலமும் (120) பரிசாரகஞ் செய்யும் சிவப்பிராமணன் ஒருவனுக்கு நிசதநெல்லு பதக்காக நெல்லு அறுபதின்கலமும் (60).

ஊற்றுக்காட்டுக் கோட்டத்து ஊற்றுக்காட்டுநாட்டு உத்தம சோழச்சதுர்வேதிமங்கலத்து சபையார் கடவ நெல்கடமைக்கு செலவு பெறக்குடுக்கக்கடவ:—

திருவாராதனைசெய்யும் சிவப்பிராமணன் ஒருவனுக்கு நிசத நெல்லு நூற்றிருபதின்கலமும், இக்கோட்டத்து சிபபுரநாட்டு ஸ்ரீ

பராந்தகச்சதுர்வேதிமங்கலத்து சபையார் கடவ நெல்கடமைக்கு செலவுபெற குடுக்கக்கடவ பரிசாரகஞ்செய்யும சிவப்பிராமணன் ஒருவனுக்கு நிசதம்நெல்லு பதக்காக நெல்லு அறுபதினகலமும், மணையில் கோட்டத்து, காண்றூர்நாட்டு மழலைமங்கலத்து (1) சபையார் கடவ நெல்லுக்கு செலவுபெறக்கடவ பரிசாரகம்செய்யும் சிவப்பிராமணன் ஒருவனுக்கு நிசதநெல்லு பதக்காக நெல்லு அறுபதின்கலமும்; இக் கோட்டத்து புரிசைநாட்டு அமராபிதச்சதுர்வேதிமங்கலத்து சபையார் கடவ நெல்லுக்கு செலவுபெறக் குடுக்கக்கடவ பரிசாரகம்செய்யும் சிவப்பிராமணன் ஒருவனுக்கு நிசதநெல்லு பதக்காக நெல்லு அறுபதின் கலமும், ஆக இப்படி ஆண்டாண்டுதோறும் முன்னின்றுக கிரம முன்னி சந்திராதித்தவரை குடுவிதாகப் பொலியூட்டால் கடவ நெல்லுக்கே செலவுபெறத் திருவாய்மொழிந்தருளத் திருமுகம் பிரசாதம் செய்தருளிவர நிமந்தஞ்செய்தது. இது

பன்மாகேசுரரக்ஷை.

கருவில் குமுதப்படை கிழக்கு (2) வது வரி.

ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர்மலர்ந்து வெண்குடை மண்டலி மன்னுயிர் தொறும் நின்றருளி......னிறை நிழல் பரப்பி நிற்ப முதற்பகுதியின் வலநேர் புனிவற்கு ஒன்றையாழி யுலாவ நற்றவத் திருமலர் செல்வியும் இருநிலமடந்தையும் கீர்த்தியின்கிள்ளையும் போர்த்தனிப் பூவையும் மதுவைவியிற் புணர்ந்து பொதுமைதீர்த்து தன்னதுரிமைத் தேவியாராக்கி சுடர்மணி மகுடஞ்சூட்டி நெடுநில மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க வீரமுந்தியாகமும் ஆரமெனப்புனைந்து வீரசிம்மாசனத்து வீற்றருளின மாப்புகழ்மனுடன் வளர்த்த கோப்பரகேசரிவன்மரான உடையார் ஸ்ரீ அதிராஜேந்திரதேவற்கு யாண்டு மூன்றுவது நாள் நூற்றறுபத்தொன்றினுல் அதிகாரிகள் சோழமண்டலத்து பாண்டிக்

(I) மதுராமங்கலம்.

குலாசனிவளநாட்டுப் புறக்கிளியூர் செட்டிப்புலாக்குடையார் பூரு
தித்த தேவனூரான ராஜராஜேந்திரமூவேந்தவேளாரும் ..............
........கொண்டான்வளநாட்டு............நாட்டார் கிழான் ராஜன்
பராந்தகபராக்கத்தானான வீரசோழ இளவகோவேந்தனும் எயில்
கோட்டத்து எயில் நாட்டு நகரம் காஞ்சிபுரத்து திருமயானமுடை
யார்கோயிலின் மேழைமண்டபம் கங்கைகொண்டசோழனில்இருந்து
திருக்காரைக்காடுடையார் தேவதானமான ஊர்கள் தச்சாக்கு கேட்டு
இத்தேவர் தேவதானமான ஊர்களில் ஊர்கழஞ்சும், குமரக்கச்சாண
மும் மீன்பாட்டமும், தட்டாரப்பாட்டமும், உள்ளிட்ட இறைப்
பாட்டமும், தறிப்புடவையும், வேலிக்காசும், தண்டவில் கடமையும்
வலங்கை இடங்கை மகன்மையும் உள்ளிட்ட அந்தராயத்துக்கு ஆபிர
காலத்துவதாய் இருபத்தைஞ்சு காசாக் கொண்டுவருகிறபடி சக்கர
வர்த்திகள் ஸ்ரீ வீரராஜேந்திரதேவற்கு யாண்டு ஏழாவதுள்ளிட......

கருவில் கீழ்வரி (3வது)

ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவளர இருநிலமடந்தையும் போர்சயப்பா
வையும் சீர்தனிச் செல்வியும் தன் பெருந் தேவியாக இன்புற நெடி
தியலூழி யுளுடைதுறைநாடும் தொடர்வனவேலிப் படர்வனவாசியும்
சுள்ளிசூழ்மதிட் கொள்ளிப்பாக்கையும் நண்ணற் கருமுரண் மண்ணைக்
கடகமும் பொருகடலீழத் தரைசர்தம் முடியும் ஆங்கவர் தேவியர்
ஓங்கெழில் முடியு முன்னவர்பக்கல் தென்னவர்வைத்த சுந்தரமுடியும்
இந்திரனாரமும் தெண்டிரை ஈழமண்டலமுழுவதும் எறிபடைக்
கேரளர் முறைமையிற்சூடும் குலதனமாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத் தொல் பெருங்காவற் பல்பழந்
தீவு மாப்பெருந்தண்டாற் கொண்ட கோப்பர கேசரிவர்மரான ஸ்ரீரா
ஜேந்திரசோழதேவற்கு யாண்டு சு (6) ஆறுவது.

ஜயங்கொண்டசோழமண்டலத்து புரவுவரித்திணைக்களநாயகன்
ஊற்றுக்காட்டுக் கோட்டத்து நீர்வேளூர்நாட்டு குலாவினை காரணைப்
போர்தைப்பாக்கிழான் நாகன்.

கச்சிப்பேட்டு திருக்கச்சிக்காடுடைய மகாதேவர்க்கு திருநொந்தாவிளக்கோன்றினுக்கு வைத்த ஆடு தொண்ணூறு சந்திராதித்தவரை சாவாமூவா பேராடாக்கையுற்று இத்தேவர்கர்மிகள்வசம் நின்றுஞாலே நிசதம் உழக்குநெய் யளக்கு கொடுத்து தாவுகொன்வேனேன் மணியில்கேட்டத்து திருக்கமக கோட்டப்புரத்துப் பிச்சியபாக்கத்து மன்றாடியுமார் தலைவன்...................மெய்கண்டு சோறுகொடுப்பேனாகவும் இவன்சொல்ல எழுதினேன் இக்கர் காணத்தான் சபபூறுவன் கருமாணிக்கமான மங்கலாதித்தன்.

இன்னும் வரும்.

காஞ்சீபுரம் அ. நடேசசெட்டி,

சின்னக்காஞ்சீபுரம்.

---

# தோத்திரமாலை

## சேரநாட்டுத்திருப்பதிகள்.

### (1) கன்னியாகுமரி

ஆரியே சத்தி அகிலாண்ட வல்லி ஆருயி ரனைத்தினு மம்மே
காரிகை கௌரி கட்டழற் சாந்தி கருணையின் கரையிலாக் கடலே
வாரிதி வரம்பில் வனப்பொடு கன்னி மதுரமா குமரியாய் நிற்கை
பாரத மாது பண்டுபோ லென்றும் பார்மிசைப் பொலிகவே யன்றோ!

### (2) சுசீந்திரம்

இந்திரன் சாபம் நீக்கி யிருடிகள் வேள்வி யேற்று
அந்தரம் மூவர்க் கில்லா வருமையை விளக்க வெண்ணிச்
சந்தமார் வடிவனைத் தாணுமா லயனாய் நின்றாய்
சந்திர சூடா நின்றன் சரணெனக் கொண்டேன் போற்றி.

### (3) திருவாட்டாறு

கேளென் மடநெஞ்சே கேசியைமால் சங்கரித்து
வாரிப் புனல்மோது வாட்டாற்றில்—காளப்
பணவரவிற் பள்ளி பயின்றானை யென்றும்
பணிவார்க்கு முண்டோ பவம்.

### (4) திருவநந்தபுரம்

திருமகளுங் கலைமகளுங் களிப்புடன்வாழ் திருப்பதியா மன்றோ சேர்தர், திருவனந்தை தனிலெங்கள் சிறக்கவிறை மாட்சிபுரி செங்கோல்வேந்தன், திருமூலன் சேரலனால் இனங்கினமூர் திருத்தொண்டு செய்யப்பெற்றே, திருவனந்த சயனமிசைத் துயிலமர்ந்த திருநாதன் பாதஞ் சேரே.

### (5) ஜநார்த்தனம்

பித்தனைச் சிரித்த வெண்ணா! பிரியனின் நகற்றி யன்பும்
பத்தியு முடைய நக்கிப் பணியொடு கொண்டு செய்யச்
சித்தமன் செல்வை யாக்கிச் செனார்த்தன கிரங்கிக் காப்பா
பத்தநின் னடிமை யல்லா லறியிலே னுய்யு மாறே.

### (6) செங்குன்றூர்

செங்குன் றூர்த் தேவி செழுங்கருணைச் சோதியே
துங்கம் விளக்குநின் றாய்நோக்கால்—கங்குல்
விரைந்தோட மக்கள் விவேகமொடு ஞானப்
பெரும்பேறு பெற்றிடுவர் காண்.

### (7) திருஆறன்விளை

கார்மேனி யான்பாற் கடற்பள்ளி விட்டுவந்து
சீர்மேவு சேரன் திருவாழு நன்னாட்டில்
சார்மேவு பார்த்த சாரதியாய் வீற்றிருக்கை
பார்மேவு மாறன் விளையகத்தே பாரீரே.

## (8) திருவல்லவாழ்

தோழிகேள் தன்னன் சூதைத் தொடிபணி யாயர்மாதர்
தாழியில் வைத்த வெப்பால் தயிர்கவர்ந் துண்டபின்னுள்
மாழைநுண் ணிடையா ரின்றி மனக்கவர்ந் தொளிந்தமாயன்
பூழைமயி லாழி பெண்டிர் புகாவிதம் நாட்டினனே.

## (9) ஏத்துமானூர்

மதியேன் மாசையின் மறமலி யேழமை
நிதியாய் நித்திலம் நிலாமணிப் பணிலமும்
கதியே கண்ணுதற் கருணையென் றறிந்தபின்
பதியே பாடியிற் பரமனை யீசனே.

## (10) வைக்கம்

கற்றிலேன் கலைக ளொன்றுங் கருதிலேன் னலங்கள் யாதும்
பெற்றிலேன் பேதை யானேன் பெருந்திருக் கோவி லப்பா
கற்றவப் பயனு மீண்டு கனுமினே துய்ய வெண்ணிப்
பற்றினே னெளியேன் நின்றன் பதமிணை யருள்செய்வாயே.

## (11) ஆலவாய்

ஆலவா யானே ஆற்றை ஆரமா யணிந்த தென்னே
காலனைக் கனிக்த காலுங் காமனைக் கவிந்த தென்னே
மாலயன் மயங்க வாம் மதலையாய் நிலைத்தா யீண்டைப்
பாவிதழ் மதலை நீண்டப் பகரிர் நிகழ்த லென்னே.

## (12) திருவாரூர்

சித்தர் தெளிந்து திருவாரூர் வீற்றருளும்
அத்த னடிபணிய வாருமே—முத்தியெனுஞ்
சீகாழி யான்மாற்றஞ் சேர்வஞ்சி யாரூர்க்கு
மாகாதோ வைம்முகனே செப்பு.

## (13) திருவஞ்சைக்களம்

நார்களுஞ் சூர்களும் நலமணி சிறக்க
வருட்கட லான்திரு வஞ்சையின் களமாக்
திரைபுரட் டூடநிசைச் சிதம்பரத் தமர்ந்தான்
திருக்கழல் சிரமிசைக் கொளவிடர் கெடுமே.

## (14) கொடுங்கோளூர்

அங்கயற் கண்ணி யருட்பெருஞ் சோதி யகில சராசரங் காக்கு, மங்கை
யர்க் கரசி மறைமுகப் பொருளே மகோசக்தி தோன்றுவெஞ் சீற்றப்,
பொங்குமா புணரி புட்கர நின்னுள் சரணெனப் புகலே யோங்குந்,
துங்கக் கொடுங்கோ ளூரமர் தேவி துயர்தவிர்த் தாளெனைத் தாயே.

கே. ஜி. சேஷையர்.

உ

# சிவபெருமானும் செந்தமிழும்.

ஊரும்பேரும் உருவுமில்லாதவன்
ஊரும்பேரு முருவமுந்தாங்கி
ஆதிசைவ அந்தண விருத்தனாய்
நாவலூராளியின் நறுமணம்தடுத்த
ஆவணவெழுத்தும் அந்தணர்முன்னர்ப்
பேசியபேச்சும் பெருந்தமிழ்ப் பாஷையே
பித்தனென்றே பிடுறப்பாடென
அத்தன்மெய்யுருவுட னறைந்ததும்தமிழே
சித்தவடமெனும் திருமடாலயத்தில்
வீரட்டானொரு விருத்தவேதியனாய்
மலர்ப்பதஞ்சூட்டி மலர்ந்ததும் தமிழே
அம்பலத்தாடு மண்ணலெம்பெருமான்
ஆரூர்வாவென் றழைத்ததும் தமிழே
சுந்தரா நினது தோழன்யாமென்று
வன்மீகநாதர் மலர்ந்ததும் தமிழே
பரவையார் விவாகப் பண்பும்பின்னர்த்
தூது நடந்துபோய்ச் சொற்றதும் தமிழே
திருமுதுகுன்றம் செல்வழி ஏதெனக்
கூடலையாற்றூர்வேதியணர்வழிகூறி
மறையவர்கோலம் மறைத்ததும் தமிழே
திருக்குருகாவூர் செல்லும்வழியில்
பிராமணவடிவம் பிடுறத்தாங்கி
நீரும் சோறும் நிழலுமமைத்துப்
பசிதணிவித்த பாஷையும் தமிழே
திருக்கச்சூரிலே இருவமுதருந்த
ஐயருருவொடு மந்தணரிலந்தொறும்
இட்டில்யாசித்தன் குரைத்ததும் தமிழே
சங்கிலியார்பாற் றழைத்ததும் தமிழே
ஐயாறுடைய வடிகளோவென்னக்

கன்றென் றழைக்கக் கதறிய பசுப்போல்
ஓலமென் றிவ் வுலகெலாங்கேட்ப
உரைத்தமொழியு மொண்டமிழ் மொழியே
தில்லையில்வாழ்ந்த திருநீலகண்டர்
ஓட்டினை ஒளித்தன் குரைத்ததும் தமிழே
இயற்பகைமனையி லிசைத்ததும் தமிழே
மாறன்விருந்து வார்த்தையும் தமிழே
அமர்நீதிபாலங் கறைந்ததும் தமிழே
கண்ணிடந்தப்பிய திண்ணனுரை
நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்பஎன்
னன்புடைத்தோன்றல் நில்லுகண்ணப்ப என்
றடிக்குத்தொடரா யமைத்ததும் தமிழே
தாசினையொலிக்கும் நேசர்பாற்சென்று
ஆடையருளியக் கறைந்ததும் தமிழே
தாதைதாளெறிந்த சண்டேசுரர்க்குத்
தாதைநாமென்று சாற்றலுந்தமிழே
திருப்பைஞ்ஞீலியிற் செல்லும் வழியிற்
காவுங்குளனும் கடிதினமைத்தே
ஆற்றுணவருத்தி யப்பமூர்த்தியின்
இளைப்பையகற்றியக் கிசைத்ததும் தமிழே
வடகயிலாய மாட்சியைக்காண
வழிநடைகொண்ட வாக்கின் செல்வர்
உடல்குறைந்தாலு முளங்குறையாமல்
முந்துறுங்காலை முனிவர்போற்றென்றி
இன்னும்பாமாலை ஏற்கவேபுன்னி
ஐயாறதனி லத்தகைக்கோலம்
காட்டுவோமென்ற கருணையுந் தமிழே
அம்மையுமத்தனு மல்லாவொருவன்
புனிதவதியெனும் புண்ணியவதியாய்
அம்மேவாவென் றழைத்ததும் தமிழே
திருச்செங்காட்டிற் றிருவடிதோய்வுற
வைரவக்கோலம் வளம்பெறக்கொண்டே
பிள்ளைக்கறியுணும் பேச்செலாந் தமிழே

திருவெண்காடர் செய்தவப்பேறாய்
மருதவாணர்மகவென வளர்ந்தே
பதினாறாண்டுபயின்றதும் தமிழே
தாயுந் தந்தையுந் தனயருமாகிய
மூவரும் மதுரையில் முறைபுரிநாளில்
வழங்கிய மொழியெலாம் வண்டமிழ் மொழியே
தென்னன்குமரன் திருமுடிதனக்கு
நன்மணிவணிகனாய் நவின்றதும் தமிழே
எல்லாம்வல்ல சித்தராய் மதுரையில்
வல்லமைகாட்டி மலர்ந்ததும் தமிழே
ஆசான் மனைமே லாசையோனகம்
விசிபெறித்த மேன்மையுந் தமிழே
மீனவன்முன்பு மெய்க்காட்டிட்டே
யூனமில்பரியிவர்ந் துரைத்ததும் தமிழே
மைவிழியாராம் வணிகப் பெண்கள்பாற்
கைவளைவிற்றுக் கலந்ததும் தமிழே
மதுரையின் வடக்கு வாயிலாற் சோழனைக
கதிபெறக்காட்டிய கருணையுந் தமிழே
தண்ணீர்ப்பந்தர் சயம்பெறவைத்தே
யுண்ணீருருத்திரன் குரைத்ததும் தமிழே
பொன்னனையாள்தன் புகழ்மனைபுகுந்தே
தன்னிகர்வாதஞ் சமைத்ததும் தமிழே
மாமனாகவே வழக்குரைபாடித்
தேமெனப்பேசிச் செயித்ததும் தமிழே
விறகுசுமந்து விற்றதும் தமிழே
பாணர்தமக்கும் பகர்தருமிக்கும்
திருவாய்மலரச் செழித்ததும் தமிழே
மண்ணைச்சுமந்து மாறனடித்த
புண்ணைச்சுமந்து புகன்றதும் தமிழே
ஐயாறதனிற் சைவனா யெழுந்தே
வழக்குரைபாடி மலர்ந்ததும் தமிழே
இன்னுமெம்பெருமா னிவ்வுலகத்தில்
ஆற்றியஆட் லனைத்தையுமினிதின்

செந்தமிழ்ப்பெருமை செப்பவும்போமோ
இவ்வாறுய தெய்வநன்மொழியைச்
சின்னாட் பலபிணிச் சிற்றறிவுடையரிற்
கலியெனக்கூறும் காலக்கொடுமையால்
கற்கவுங் கேட்கவுங் கருதாதந்தோ !
சோறதுகொண்டு பிறலடைக்கும
இம்மைச்சுகமே மெய்ம்மைச்சுகமென
வேற்றுப்பாஷையைப் விரும்பிக்கற்றே
அந்நியநாட்டி லவதரித்தவர்போல்
இன்றுதான்கப்பலில் இறங்கினார்போலப்
பேசவும எழுதவும் பிரசங்கம் புரியவும்
பழக்கமில்லையெனப் பருமிதம் பகர்வர்
அறம்பொரு ளின்பம்வீ டடையும் நூற் பெருகக்
வடமொழி தென்மொழி வாய்ந்துள போல
எப்பா ஷையிலும் இல்லையென எண்ணார்
இதனால்,
தெய்வத்தியானம்ம சிந்தையில் வையார்
தானதருமந் தவஞ்செபமுயலார்
தீர்த்தயாத்திரைக்குச் செல்லவுந்துணியார்
கோயிலில் நுழைந்து கும்பிடநாணுவர்
நாத்திகம்பேசி நாத்தழும்பேறுவர்
சந்தியாவந்தனந் தான்செபமறந்தார்
அந்நியமதத்தி லநேகரைவிட்டனர்
லலாட்டுனியராய் நாடெலாந்திரிவர்
ஒருமயிர் நீப்பி னுயிர்விடுங் கவரிமான்
அனைய மரபி லவதரித் திட்டவர்
குஞ்சி யழகெனக் கூறு வண்ணம்
முண்டிதமென்ச்சொல் மொய்ம்மயிர் நீக்குவர்
சான்றோர் வகுத்த சாதியாசாரம்
வேண்டுவதில்லையென விதண்டைகள் பேசுவர்
பல்மதத்தினரொடும்புகருணவுண்பார்
விதவாவிவாகம் விதியெனவிளம்புவர்
ஊக்கமது கைவிடேலெனும் நீதிக்

உக்கந்தரு மதுவாமென வருந்துவர்
இன்னுமிங்கேயியம்புதற்கரிய
அநாசாரமெல்லாம் ஆஸ்தியாப்பெற்றனர்.
நாவை மறந்தவர் தாமுறுங்கேடெலாம்
இவர்களு மடைவரென் றியம்பவும் வேண்டுமோ
ஆதலாலினிமேலாகிலுந்தமிழாம்
பெற்றதாயைப் பேணுவோராகி
உய்யுமின் உய்யுமின் உய்யுமின் னீரே

ஸ்ரீ. சதாசிவப்பிள்ளை,
நாஷனல் ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்.
நாகை நீலலோசனிப் பத்திராதிபர்.

நாகபட்டணம்,
22-5-19.

---

# தனிநிலைச்செய்யுட் கோவை.

செந்தமிழ் கஅ-ந் தொகுதி [illegible]-ம் பக்கத்தொடர்ச்சி.

10. அவ்விளக் கேற்றிய வச்சுடர் முன்னர்
வாய்ந்தசுட ரன்றெனும் வழக்கா றுண்மையின்
வந்தவுயிர் முன்னது வன்றென வறிவறிஇப்
போற்று மொருபொருள் பொய்யெனப் புகலுநர்
கூற்றுமெய் யதுவாசக் கொள்கினும் கலங்கலி
முண்மைதெளி யீகா ஞெளித்துப் பொய்த்தாங்
கறஞ்செய் யொருமகன் றுறக்க மணுகுஉ
மறஞ்செய் யொருமக னாகத் தணுகுஉ
மெல்லாச் செல்வமு மிம்பர்வர் மெய்தும்
முன்னோன் பின்னோ னலையுவூ பிறவே
குறுகுறுஉ மென்றுங் கொள்பவை யனியே
பெரிய வெனினும் பிரிதற் குள்ளன
வுருக்கு மனத்தி னுயர்ந்தோர் தமவழி
வடிவப் பற்றறு வகைத்திறம் போற்றித்
தீதொரீஇத் தெளிநலஞ் சேர்குவ சென்றுஞ்
சாதற் றுன்போ டவமுத் தபுத்த

நீதிமுறை யன்றுநீஇ நிலன்வாழ்வு கருதியில்
லோதினர் பொய்யென் றுரைப்பினு மவனே
யொன்றலி னப்பொரு ளுண்டென் றுணரா
ரென்றுந் துன்பந் திளைகுவர்
நன்றிதரும் பற்பல நயனெலா மிழந்தே.

11. தம்மிற் பிறருந் தம்வெறுப் பறியார்
தம்வழித் தழுவல ரென்றுந் தங்குறை
தோரார் பிறர்குறை செய்தன ரென்று
முயர்வழித் தல்லன வுயர்த்தின ரென்றும்
பழமை மறந்து புதுமை தழீஇக்
கிழமை பொரீஇக் கெடுத்தன ரென்று
நெருப்புத் துளிப்படு நேரினில் பற்றுச்
சிவந்து புகைத்துத் தெறுங்கடுங் குரலராய்த்
தெளிந்து மலர்ந்து சொற்றேன் பிலிற்றி
மகிழ்வுபூத் தமர்ந்த மனனிலை கலக்கி
நல்லோர் கனிந்து நாவடிப் படுத்தித
தம்மை யழித்துத் தமர்சார் பகற்றிச்
செம்மை தருவோர்ச் சேர்பொலா தாக்கி
யருமை சான்ற விருமை யழிப்பவர்
பார்ப்பன பிறவெலாம் படைஇக் காக்கு
மொருபொரு ளன்றியொன் றமையா தாத
னல்லன நன்மை யல்லன தீமை
நல்குத லுள்ளன நண்ணுத லில்லன
கண்ணு தாதலொடு தம்மழித் தற்கே
வஞ்சப் புல்லர் வனைந்த சூழ்ச்சிக்
காளா யொருபொரு ளடிமைப் படுத்த
லென்னவும் பிறவு மாதற்
றன்மையறிந் தாயுந் தகுதியில் லவரே.

12. ஒருசார் மங்கைய ரனன்முகம் வேட்குந
ரொருசார் மங்கைய ரதுவெறுக் குநரே
யின்னண மொருசார் மாக்கட் கினிய
வுணவு முதல பிறிதுசார் பின்றா

மறவெறுத் தம்மா பிறவிழை குநரே
யஃறிணை பனவு மிவ்வே யலமயு
மிவற்றுற் பழகிய வினியன பிறவே
யல்லன வாத லவனிக் கியற்கை
இனியே,
ஓருடற் குரியவா மைம்பொறி யுள்ளு
மொருபொறி வேட்பன பிறவெறுப் பவ்வே
யெனிது மைம்பொறி வேட்பன வெல்லா
மவ்வவ் வழிநின் றளாய்மன னின்புறூஉம்
அறிவே,
மனன்வேட் டெல்லாம் வன்மையொடு தூக்கிக்
கொள்ளுவ கொண்டு தள்ளுவ தள்ளி
யெள்ளுறூஉ நன்னில வெய்துறூஉ மென்ப
வாதலி னுலகோர் தமக்கமை வனதா
நல்லன வென்று மாகா தனதா
மல்லன வென்று மமைதல்
புல்லிய நெறித்தாப் புகன்றிசி னோரே.

13. உலகிய லொத்தம வுளத்தமை வொன்றற்
றமிழ்நுவழி முழுச்சொல லணாஅய்ச் சுருங்கித்
தெளிவுறீஇ யாழ்ந்து செப்பத் தெளிதாம்
வேட்கை தரீஇ மேன்மே லூக்கி
மன்பதை தமக்கெலா மின்றியமை யாத
நன்றிபுரி முத்தை நற்றமிழ்ப் பாட்டிடைக்
கோக்குமுத லொப்பாக் கொள்ளுறுப்பு மிடைதல்
பாக்கன் றென்னப் பகருந ரென்னே
கண்கவர் வனப்புக் காட்டோ வியத்திடை
யவ்வுறுப் பில்லெனி னுவர்த்தாங் ககற்றியு
மவ்வுறுப் புறினே யவாவுறீஇ மகிழ்ந்து
மெண்ணிலர் பற்பல வியம்புநர்
மண்டிணி ஞாலத்து மாண்புறினி நன்றே.

14. பின்வரு தம்வழிப் பெருக்கங் கண்ணார்
தம்முறு பொருளெலாம் பிறர்க்குத் தந்தவர்

நிலனவு நீரவு நெருப்பவும் விண்ணவு
முயிரவு முடலவு மியலவுஞ் செயலவு
மழிப்பவும் வளர்பவு முறுபவும் பெறுபவு
நன்னர்ச்செய் பண்ணு ணமக்குதவு நல்லோர்
செயற்கரி தியற்றிச் சிற்றகடு நணைப்பவர்
தாம்பெற லழிவறு தலைசிறி தறிகிலர்
தேள நலனுறு செயலொன் றறிகுநர்
சிறுகுடில் வாழ்க்கையர் சீரை தைஇய
வுடுக்கையர் கல்விச் செந்நீ ரூற்றின
ரழிவன தேரு வாண்மைய ரென்றுந்
தொழுதல கேத்துந் தூரிசில் வினையின
ரவாஅ முதல வறுத்துநிலை யாற்றலர்
தாழ்புலைக் குடியினுங் கேழ்கிலா விசு
ப[illegible]பத் தன்ன மாசறு மாண்பினர்
தலைசென் றெனினுந் தக்கவொன் றூற்றுந
ருலகுமுறை நடாத்தற் குரியவை சூழப்
பற்றறு நற்றிறன் படர்ந்துவிடு வெகுங்
குற்றமறு காட்சிக் கூர்த்தறி குழூஉவின்
மற்றையர் சூழ்ச்சி மறந்துஞ் சூழ்கில
ரிழிசினர் பகைஞ ரென்னு ரேற்றக்
குண்மையொடு பழிச்சு முரைசால் சிறப்பினர்
மகிழ்தலுல தேறுந் துயர்தம தாக்குந
ரெனைப் ராயினு நல்வழிக் கேற்றுவ
ருடற்றுன் பறியா ருளத்துன் பில்லோர்
மாண்பொழு தன்றி வீண்பொழுது கழியார்
னைத்தலை யுலகு நல்வழிப் படூஉக்
கனவுகுறு வில்லா வுறக்கம் காண்கிலர்
தாக்குவனர் விலாவனர் நகைஇவனர் மானின்
முருக்குநர் வழிகெட முகிர்க்கவழி செழிக்குநர்
இவரே,
யெல்லா வுயிரு மேமம் பூணச்
செந்தண்மை பூண்ட செல்வத்
தந்தண ரெனுநல் லறத்திறத் தினரே.

(தொடரும்)